# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 18 Issue 7 February 2024 Rs.30

ஆண்டு 18 இதழ் 7 பிப்ரவரி 2024 ரூ.30




## முல்லா கதைகள்

அ. மார்க்ஸ்



## நோபல் உரை

நதீன் கோர்டிமேர்



## Killers of the Flower Moon

## திரைக்கதை உருவாக்கம்

மார்ட்டின் ஸ்கார்ஸஸி

நேர்காணல்

ஆண்டு 18 இதழ் 7

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

பிப்ரவரி-2024 விலை ரூ. 30



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

# இந்த தீ பரவக்கூடாது!

## பிரபு திலக்

அயோத்தியில் ராமர் கோவில் குடமுழுக்கு அசம்பாவிதங்கள் இன்றி அமைதியாக நடந்து முடிந்திருக்கிறது. பெரும்பான்மை மக்களின் 'வெற்றி' கொண்டாட்டங்கள் கரை கடக்கவில்லை என்பது பெரும் ஆசுவாசத்தை தந்தது என்றால், அந்த கொண்டாட்டங்களை கண்டும் காணாதது போல் அமைதியாக கடந்து சென்ற சிறுபான்மை மக்களின் பெருந்தன்மையும் இந்த அமைதிக்கு முக்கியக் காரணம். அவர்களின் இந்த பெருந்தன்மை நிச்சயம் வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்படும்.

ஆனால், இந்த அமைதி எக்காலத்துக்கும் நீடிக்குமா என்ற கேள்விக்கான பதில் உறுதியில்லாமல் இருப்பதுடன் ஒருவித அச்சத்தையும் தராமல் இல்லை. அதற்குக் காரணம், ராமர் கோவில் குடமுழுக்குக்கு பின்பு வெளியான ஒரு ஆய்வு முடிவு.

இந்தியாவில் உள்ள இந்து மதத்தவர்களின் மனநிலையைப் பற்றிய ஒரு கருத்துக் கணிப்பு முடிவு சமீபத்தில் வெளியிடப்பட்டது. Pew Research Center (PRC) என்ற அமைப்பு, 2019 நாடாளுமன்றத் தேர்தல் முடிவுகளுக்குப் பிறகு, கடந்த 2019 நவம்பர் முதல் 2020 மார்ச் வரை, இந்தியா முழுவதும் 30 ஆயிரம் இந்துக்களை சந்தித்து இந்த கருத்துக்கணிப்பை நடத்தியுள்ளது.

இதில், உங்களுக்கு விருப்பமான கடவுள் யார் என்ற கேள்விக்கு 44 சதவீதம் பேர் சிவன் என்றும், 35 சதவீதம் பேர் ஆஞ்சநேயர் என்றும், 32 சதவீதம் பேர் விநாயகர், 28 சதவீதம் பேர் லட்சுமி, 21 சதவீதம் பேர் கிருஷ்ணர், 20 சதவீதம் பேர் காளியை தங்கள் இஷ்ட தெய்வங்களாக கூறியுள்ளனர்.

ராமரை 17 சதவீதம் பேர் மட்டுமே தங்கள் இஷ்ட தெய்வமாக கூறியுள்ளனர். இந்தியாவின் மத்திய மண்டலப் பகுதிகளில்தான் ராம பக்தர்கள் அதிகமாக உள்ளனர். இங்குள்ள இந்துக்களிலும் 27 சதவீதம் பேருக்கு மட்டுமே ராமர் இஷ்ட தெய்வமாக இருக்கிறார். வட இந்தியாவில் 20 சதவீதம் பேருக்கும் கிழக்கு இந்தியாவில் 15 சதவீதம் பேருக்கும் தென்னிந்தியாவில் 13 சதவீதம் பேருக்கும் ராமர் இஷ்ட தெய்வமாக இருக்கிறார். வடகிழக்கு இந்தியாவில் மிகக் குறைந்த அளவாக 5 சதவீதம் பேருக்கு மட்டுமே ராமர் இஷ்ட தெய்வமாக இருக்கிறார்.



இதுவரை பிரச்சினையில்லை. அச்சம் தரும் முடிவு இனிதான் வருகிறது. அதாவது, இந்த கருத்துக் கணிப்பில் 45 சதவீதம் இந்துக்கள் மட்டுமே தங்கள் பக்கத்து வீடுகளில் பிற மதத்தினர் வாழ்வதை ஏற்றுக்கொள்கிறார்கள். 55 சதவீதமானவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. அதைவிட அச்சம் தரக்கூடியது, 36 சதவீதம் இந்துக்கள் தங்கள் பக்கத்து வீடுகளில் இஸ்லாமியர்கள் குடியிருப்பதை விரும்பவில்லை.

மதச்சார்பின்மையால் இந்தியாவுக்கு நன்மை இருப்பதாக 53 சதவீதம் இந்துக்கள் மட்டுமே நினைக்கிறார்கள். 24 சதவீதம் பேர் அது இந்தியாவின் வளர்ச்சியை பாதிப்பதாக நினைக்கிறார்கள். 24 சதவீதம் பேர் இது தொடர்பாக கருத்து எதையும் தெரிவிக்கவில்லை.

எது நடந்துவிடக்கூடாது என நினைத்து இவ்வளவு நாளும் பயந்திருந்தோமோ அது நடக்கத் தொடங்கியிருக்கிறது என்பதையே இந்த ஆய்வு முடிவுகள் காட்டுகிறது.

இரண்டாம் உலகப் போரின்போது ஜெர்மனி பல நாடுகளை எதிர்ப்பே இல்லாமல் கைப்பற்றி, அங்கிருந்த யூத மக்களை அழித்தொழிப்பதை ஆரம்பித்த நேரத்தில் எடுக்கப்பட்ட ஆயிரக்கணக்கான புகைப்படங்களில் ஒரு புகைப்படம் மிகப் பிரபலமானது; அதை ஒருமுறை பார்த்த எவராலும் அதன்பின்னர் மறக்க முடியாதது.

அந்தப் புகைப்படத்தில் நாற்பது வயது பெண் ஒருவர், பொது இடத்தில், பின்னால் சில ஆண்கள் சிரித்தபடி துரத்த, ஆடைகள் அவிழ்க்கப்பட்டு, உள்ளாடைகள் கிழிந்த நிலையில், மார்பு தெரிய, அலறியபடி தெருவில் ஓடி வருவார். அவரை துரத்துபவர்களில் கையில் ஒரு கழியோடு, பள்ளி செல்லும் வயதிலிருக்கும்



ஒரு சிறுவனும் இருப்பான். அந்தப் பெண்மணியைத் துரத்தியவர்கள் அதுவரை அமைதியாய் அவருடன் ஒரே ஊரில் வாழ்ந்தவர்கள் என்பதுதான் அப்புகைப்படத்தை என்றும் மறக்க முடியாததாக மாற்றியது.

உணர்ச்சியேற்றப்பட்ட கும்பல் மனநிலையில், சாதாரணமான மனிதர்களும், சக மனிதர்கள் மீதான வன்முறையை எந்த அளவுக்கு கொஞ்சமும் குற்றவுணர்ச்சியின்றிச் செய்யக்கூடிய மிருகங்களாக மாறுவார்கள் என்பதற்கு அந்தப் புகைப்படம் போல சரித்திரத்தில் நிகழ்ந்த அனேக சம்பவங்கள் உண்டு.

குஜராத் கலவரத்தில் பாதிக்கப்பட்ட பில்கிஸ் பானுவை பாலியல் வன்கொடுமை செய்து, அவரது மூன்று வயதுப் பெண் குழந்தையை சுவற்றிலடித்துக் கொன்றவர்கள் அனைவருமே, அவருக்கு நன்கு அறிமுகமான, அவரது ஊர்க்காரர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. அதிலே ஒருவர், அவரது ஊரில் அவருக்குச் சிறு வயதிலிருந்தே சிகிச்சையளித்த மருத்துவர்.

அதிகாரத் தரப்பிலிருந்து முழுவீச்சிலான இனச் சுத்திகரிப்புக்கு அறைகூவல் விடுத்தால், சரியான விதத்தில் தூண்டி விடப்பட்டால், தூபம் போடப்பட்டால், ஆண் பெண் வித்தியாசமில்லாமல், பக்கத்து வீட்டுக்காரர்கள்கூட வன்முறையாளராக மாறுவார்கள் என்பதற்கான முன் உதாரணங்கள் தான் பில்கின்ஸ் பானுவுக்கு நிகழ்ந்ததும், புகைப்படத்தில் இருந்த யூதப் பெண்மணிக்கு நிகழ்ந்ததும்.

பக்கத்து வீடுகளில் மாற்று மதத்தினர் வசிப்பதை விரும்பாத, அவர்கள் மேல் மனதுக்குள் அத்தனை வன்மங்களைத் தூக்கிச் சுமந்து திரிபவர்களாக பெரும்பான்மை இந்துக்கள் மாற்றப்பட்டு வருகிறார்கள் என்பதையே PRC கருத்துக்கணிப்பு முடிவு உறுதிபடுத்துகிறது. இத்தனை வன்மங்களை மனதுக்குள் அடக்கி வைத்திருப்பவர்களுடன் தான், எதிர்காலத்தை சந்திக்க வேண்டியுள்ளது என்ற உண்மை மனதின் அடியாழத்தில் ஒரு இந்துவுக்கே கூட கடுமையானதொரு அச்சத்தையே எழுப்பும். முன்பைவிட நாம் அதிக கவனமாக இருக்கவேண்டிய காலக்கட்டம் இது.

அதேநேரம், இப்படியான சம்பவங்கள் தமிழ்நாட்டில் நடக்க வாய்ப்பில்லை; இங்கே படித்தவர்களும் ஓரளவு அரசியல் புரிதல் உள்ளவர்களும் அதிகம். மத நம்பிக்கைகள் இருந்தாலும் மத வெறி குறைவு என்பதை காட்டும் நம்பிக்கையை தரும் நிகழ்வு ஒன்றும் அண்மையில் நடந்துள்ளது.

அயோத்தி ராமர் கோவில் குடமுழுக்குக்கு முதல்நாள் (ஞாயிற்றுகிழமை), தமிழ்நாட்டில் சிவகங்கை மாவட்டம் இளையான்குடி அருகே உள்ள சாலைக்கிராமத்தில் பள்ளிவாசல் திறப்பு விழா ஒன்று, மத நல்லிணக்கத்தை போற்றும் வகையில் நடைபெற்றது. அந்த கிராமத்தில் வசிக்கும் இந்துக்களும் கிறிஸ்தவர்களும் சீர்வரிசைகளுடன் சென்று, அந்த பள்ளி வாசல் திறப்பு விழாவில் கலந்து கொண்டு, கொண்டாடியுள்ளனர். இந்துக்கள் தாம்பூலத்தில் நெல்மணிகள், மிளகாய், வெற்றிலை, பாக்கு ஆகியவற்றை சீர்வரிசையாக பள்ளிவாசலுக்கு எடுத்துச் சென்றனர். கிறிஸ்தவர்கள் பாதிரியார் தலைமையில் மெழுகுவர்த்தி, பழங்களை சீர்வரிசையாக கொண்டுச் சென்றனர். கிராமம் முழுவதும் முக்கிய வீதிகள் மற்றும் பேருந்து நிலையங்களில் வைக்கப்பட்டிருந்த பேனர்கள் மூன்று மதத்தவரும் திறப்பு விழாவுக்கு அழைப்பது போல வடிவமைக்கப்பட்டிருந்தன. இந்த பேனர்கள் ஊர் கவுன்சிலர், ஆட்டோ ஓட்டுநர்கள் சங்கம் போன்றவர்கள் சார்பாக ஊரின் பொது இடங்களில் வைக்கப்பட்டிருந்தது குறிப்பிடத்தக்கது. சீர்வரிசை கொண்டுவந்த இருமதத்தினரையும் சாலைக்கிராமம் பள்ளிவாசல் ஜமாத் தலைவர், ஜமாத் உறுப்பினர்கள் மற்றும் வாலிபர் முன்னேற்ற சங்க நண்பர்கள் ஆரத்தழுவி வரவேற்று பள்ளிவாசலுக்குள் அழைத்துச் சென்றனர். குளிர்பானங்கள், தண்ணீர் கொடுத்து தங்களது அன்பை வெளிப்படுத்தினர். பின்னர் 150 கிடா வெட்டி 7,000 பேருக்கு அசைவ பிரியாணி வழங்கப்பட்டுள்ளது.

மத நல்லிணக்கத்தை போற்றும் வகையில் நடைபெற்ற, இளையான்குடி சாலைக்கிராம பள்ளி வாசல் திறப்பு விழா, அப்பகுதி மக்களுக்கு மட்டுமல்லாமல் நமக்கும் மனநெகிழ்ச்சியையும் மகிழ்ச்சியையும் தருகிறது.●

# Killers of the Flower Moon
# திரைக்கதை உருவாக்கம்

**மார்ட்டின் ஸ்கார்ஸஸி**
**தமிழில்: ராம் முரளி**

அமெரிக்காவின் ஓசேஜ் மாகாணத்தில் எண்ணெய் வளத்தைச் சூறையாட, பூர்வகுடிகளின் மீது, 1920களில் நிகழ்த்தப்பட்ட பெரும் இன அழிப்பு சம்பவங்களை மையமாக வைத்து உருவாக்கப்பட்டிருக்கும் திரைப்படம், Killers of the Flower Moon. தலைசிறந்த இயக்குனர்களில் ஒருவரான மார்ட்டின் ஸ்கார்ஸஸி இதை இயக்கியிருக்கிறார். எஃப்.பி.ஐ. (FBI) ஏஜெண்ட்டுகளின் பார்வையில் இந்த வரலாற்றை டேவிட் கிரேன் புத்தகமாக எழுந்திருந்தார். அதிலிருந்து இப்படத்திற்கான திரைக்கதை உருவாக்கப்பட்டிருக்கிறது.

ஓசேஜ் பகுதியில் எண்ணெய் கண்டுப்பிடிக்கப் படுவதால், அப்பகுதி மக்கள் திடீரெனச் செல்வந்தர்களாக மாறுகிறார்கள். பெரும் பணம் புழங்கும் நிலமாக அது திகழ்கிறது. இதைச் சுரண்ட திட்டமிடும் வெள்ளையின பெரு முதலைகள், அப்பகுதிகளில் குடியேறி பழங்குடியினரின் நம்பிக்கையைப் பெற்று அவர்களுடன் இரத்த உறவை ஏற்படுத்திக்கொள்கிறார்கள். பின்னர், அவர்களுடைய செல்வத்தைத் தமது பெயருக்கு மாற்றி எழுதிக்கொண்டதும், படுகொலை செய்து விடுகிறார்கள். இதுவொரு தொடர் நிகழ்வாக இருந்திருக்கிறது. இப்படிப் பூர்வகுடிகளுக்கு இழைக்கப்பட்ட துரோகம் இத்திரைப்படத்தில் நம் கண் முன்னால் நிறுத்தப்படுகிறது.



எளியவர்களையும் பாசாங்கு அற்றவர்களையும் அன்பு, காதல், நேசம், ஆறுதலளித்தல் எனப் பல்வேறு கத்திகளைக் கொண்டு வஞ்சித்து உயிரறுக்கும் நிகழ்வுகள் வரலாறெங்கும் நிகழ்ந்துகொண்டுதான் இருக்கிறது. அதன் ஒரு அத்தியாயத்தை இத் திரைப்படத்தில் நாம் கண்ணுருகிறோம். குறிப்பாக, எர்னெஸ்ட் மோலி எனும் தம்பதியினருக்குள் நிலவிய காதலின் வழியே இந்த வரலாறு நமக்கு விவரிக்கப்படுகிறது.

கனமான காட்சிகளைக் கொண்ட இத்திரைப்படத்தை மார்ட்டின் ஸ்கார்ஸஸி அதிகபட்ச நேர்மையுடன் பதிவுசெய்திருக்கிறார். படத்தில் இறுதிக் காட்சியில் திரையில் தோன்றும் அவருடைய முகத்தில் படரும் குற்றவுணர்வே அதை மெய்ப்பிப்பதாக இருக்கிறது. இந்தப் படத்தின் திரைக்கதை உருவாக்கம் குறித்து New Yorker இதழுக்கு அவர் அளித்திருந்த நேர்காணலில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட கேள்வி–பதில்கள் இங்கு தமிழாக்கம் செய்யப்பட்டிருக்கின்றன.

– ராம் முரளி

*Killers of the Flower Moon திரைப்படத்தில் விசேஷமாக ஏதோவொன்று இருக்கிறது. சிறந்த, தாக்கம் ஏற்படுத்துகின்ற, உணர்ச்சிவயப்பட்ட கதைகளைச் சொல்வது எப்போதுமே உங்கள் வழக்கமாக இருந்திருக்கிறது. ஆனால், இந்தத் திரைப்படத்தைப் பொருத்தவரையில் கதையைச் சொல்வதுடன் வேறு சிலவற்றையும் நீங்கள் செய்திருக்கிறீர்கள். கிட்டத்தட்ட நீங்கள் சாட்சியம் அளித்திருப்பதைப் போன்றதொரு உணர்வு இத்திரைப்படத்தைப் பார்த்து நிறைவுசெய்யும்போது உண்டாகியது. இதை உருவாக்கும்போது இத்தகைய உணர்வு உங்களுக்கும் இருந்ததா? இதன் உருவாக்கத்தில் அவ்விதமான அணுகுமுறை முன்பே திட்டமிடப்பட்டிருந்ததா?*

நிச்சயமாக. 1974ஆம் ஆண்டு என்று நினைக்கிறேன், தெற்கு டகோடாவில் வாழ்ந்த ஒக்லாலா லகோட்டா (சியோக்ஸ்) பழங்குடியினருக்கு மத்தியில் ஓரிரு தினங்களைச் செலவிடுவதற்கு எனக்கு வாய்ப்பு அமைந்தது. அப்போது அந்நிலத்தை மையப்படுத்தி ஒரு படைப்பை உருவாக்கத் தீர்மானித்திருந்தேன். ஆனால், துரதிர்ஷ்டவசமாக அது கைவிடப்பட்டது. அந்நிலத்தில் நான் செலவிட்டிருந்த தினங்கள் எனக்கு அதிர்ச்சிகரமான அனுபவத்தை வழங்கின. அப்போது நான் மிகவும் இளைய வயதில் இருந்ததால், என்னால் அச்சூழலை முழுமையாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. அங்கு நிலவிய துயரச் சூழலையும் ஏழ்மையையும் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. தொழிலாள வர்க்கத்தைச் சேர்ந்த ஆண்களும் பெண்களும் நிரம்பிய எலிசபெத் தெரு, மோட் தெரு, முல்பெரி ஆகிய பகுதிகளில் நிலவிய வேறொரு வகையிலான வறுமைச் சூழலில்தான் நானும் வளர்ந்தேன். அதனால் வறுமை எனக்கு பழக்கப்பட்டதுதான். என்றாலும், இந்தச் சூழலில் நிலவியது போன்ற கொடுந்துயரை நான் ஒருபோதும்

பார்த்திருக்கவில்லை. துளி நம்பிக்கையும் இல்லாத அந்தச் சூழல் குறித்து என்னால் விவரிக்கவும் முடியவில்லை. சில வருடங்களுக்குப் பிறகு லாஸ் ஏஞ்சல்ஸில் மீண்டும் சில பூர்வக்குடி அமெரிக்கர்களை நான் நேரில் சந்தித்தேன். அப்போது மீண்டும் அவர்களைப் பற்றிய ஒரு படைப்பை உருவாக்கும் எண்ணம் உருவாகியது. அதே சமயத்தில், நான் வளர்ந்த காலகட்டத்தில் பூர்வக்குடி அமெரிக்கர்களுக்கு ஆதரவாக உருவாக்கப்பட்ட சில படங்களையும் பாத்திருக்கிறேன். தவறுகளைச் சரிசெய்தல் எனும் நலநோக்கம் அந்தப் படங்களில் இருந்ததென்றாலும் வெள்ளையின அமெரிக்க ஆண்களே அதில் பூர்வக்குடியினராக நடித்திருப்பார்கள்.

இத்தனை ஆண்டுகளில் நான் வளர்ந்த வறுமைச் சூழலில் இருந்து முற்றிலும் வேறுபட்ட சூழல் அவர்களுடையது என்கிற உணர்வு எப்போதும் எனக்கு இருந்திருக்கிறது. வெஸ்டர்ன் படங்களை இயக்கிய சாம் பெக்கின்பாவுக்குப் (Sam Peckinpah) பிறகு, ஒரு புதிய பிரதேசம் இன்னும் ஆராயப்படாமல் இருப்பதாக எனக்குத் தோன்றியது: ஓர் அமெரிக்கப் பூர்வகுடியின் அனுபவத்தில் இருந்து இதை எப்படிச் சிந்திக்க வேண்டும்? என்ன செய்ய வேண்டும்? அவர்கள் உண்மையிலேயே மறைந்துவிட்டார்களா? சிறுவயதில், அவர்கள் எங்களுடன் சமமாக இருந்ததாகவும் அவர்கள் நம்மைப்போலவே இருப்பதாகவும் கருதினோம். ஆனால், எனக்கு தெரியவில்லை. அங்குச் சென்று அவர்களுடைய சூழலை முழுமையாக உள்வாங்கிப் பார்த்தறிந்தபோது, அது முற்றிலும் வேறானதொரு அனுபவமாக இருந்தது.

**1974இல் இருந்து இப்போது வரையிலான காலகட்டத்தைக் கணக்கில் எடுத்துக்கொண்டால், நாற்பது ஆண்டுகள் கடந்திருக்கின்றன. இத்தனை ஆண்டு காலமும் பூர்வக்குடி அமெரிக்கர்களைப் பற்றிய திரைப்படத்தை இயக்குவது குறித்துச் சிந்தித்துக் கொண்டிருந்தீர்களா?**

நான் அத்தகைய எண்ணத்தில் இருந்து விலகி இருந்தேன். அந்த அனுபவம் எனக்களித்த அதிர்ச்சி தீவிரமானது என்பதால் அவசரப்பட்டு அந்தக் களத்தைக் கையாள வேண்டாம் எனும் நினைப்பில் இருந்தேன். ஒருவகையில், அவர்களுடைய வாழ்க்கையைச் சொல்வதற்கு அழுத்தமான ஒரு கதையும் எனக்குத் தேவையாய் இருந்தது. அதனால்தான் இந்தக் கால தாமதம்.

**டேவிட் கிரேனின் (David Grann) புத்தகம் உங்களை எப்படி வந்தடைந்தது? நீங்கள் அதுகுறித்து எப்படி அறிந்துகொண்டீர்கள்?**

ஆஹ். ரிக் யான் (Rick Yorn) அந்தப் புத்தகத்தை எனக்குக் கையளித்தார். ரிக் என்னுடைய மேலாளர். அவர் டி காப்ரியோவுக்கும் மேலாளர் ஆவார். Silence திரைப்படப் பணிகளின்போது அவர் எனக்கு இதனை கையளித்தார். பூ நிலா எனும் கருத்தாக்கமும் (அது பெண் தன்மையிலானது), நிலவு குறித்த பிம்பங்களும் ஏசு கிருஸ்துவின் பெண் தன்மையும் (அவருடைய ஆண் பக்கத்தை விட இது மிக முக்கியமானது) ஒன்று கலந்து இதன் மீது எனக்கு ஆர்வத்தை உண்டாக்கின. பூ நிலா, பெண் தன்மை, இவற்றோட 'பூ நிலாக் கொலையாளிகள்' என்பதும் அதிலுள்ள மோதலும் என்னை ஈர்த்தன. நான் கற்பனையில் மட்டுமே அனுபவித்திருந்த அந்த நிலபரப்பை ஒருபோதும் நிஜத்தில் நான் உணர்ந்திருக்கவில்லை.

ஒருமுறை அந்தப் பகுதிக்கு நாங்கள் பயணித்தபோது ஒரு சாலையில் மிக நீண்ட நேரம் எங்கள் பயணம் தொடர்ந்தபடியே இருந்தது. அது எனக்கு ஆச்சரியத்தை அளித்தது. நாம் ஏன் இவ்வளவு மெதுவாகப் பயணித்துக் கொண்டிருக்கிறோம் என எனக்குள் கேள்வியெழுப்பிக் கொண்டேன். அந்தத் தருணத்தில், அந்தச் சாலையில் எங்கள் பயணம் தொடங்கி 45 நிமிடங்கள் ஆகியிருந்தது. நான் வேகக்காட்டியைப் (Speedometer) பார்த்தேன். அது மணிக்கு 75 கிலோமீட்டர் வேகத்தில் பயணிப்பதாகக் காட்டியது. அப்போதுதான் உணர்ந்தேன். அந்தச் சாலைக்கு முடிவே இல்லை. இருபுறங்களிலும் மரங்களே இல்லாத சாலை அது. அதனால், நாம் எவ்வளவு வேகத்தில் செல்கிறோம் என்பதை நம்மால் உணரவே முடியாது.

**நீங்கள் அந்தப் புத்தகத்தை எப்படித் திரைப்படமாக உருவாக்கியிருக்கிறீர்கள் என்பதை நினைத்து வியக்கிறேன். பாடம் நடத்துவதில் எனக்கு ஆர்வம் எதுவும் இல்லை. ஆனால், ஒருவேளை புத்தகப் பிரதியைத் திரைக்கதையாக உருவாக்குவது குறித்து நான் எப்போதேனும் பாடம் நடத்தினால், இந்தத் திரைப்படத்தைத்தான் அதற்கான உதாரணப் பிரதியாக எடுத்துக்கொள்வேன். இது உங்களின் மிகச் சிறந்த சாதனைகளில் ஒன்று. புத்தகத்தில் உள்ள அனைத்துமே உங்கள் படத்தில் இருக்கிறது, கொடூர நிகழ்வுகளின் விவரங்கள் முழுமையாகவே இதில் இருக்கின்றன, ஆனால், அதை அணுகும் விதத்தில் நீங்கள் மாற்றங்களைச் செய்திருக்கிறீர்கள்.**

ஆமாம். மேற்கு மற்றும் அதுதொடர்பானவை குறித்து நானும் லியோவும் இணைந்து ஒரு திரைப்படத்தை உருவாக்க விரும்பினோம். அதில், முதலில் அவர் எஃப்.பி.ஐ. ஏஜெண்ட்டான டாம் வொயிட் கதாபாத்திரத்தில் நடிப்பதாக இருந்தது. நான் அவரிடத்தில், சரி, நாம் இதை எப்படிச் செய்யப் போகிறோம்? டாம் வொயிட் நிஜத்தில் மிகவும் வலிமையானதொரு மனிதர். மிக மிக ஒழுக்கமான, நேரடியான, அறப்பண்புள்ள ஒரு மனிதர். வார்த்தைகளை அதிகம் விரயம் செய்யாதவரும் கூட. பேசுவதற்கு அவருக்கு அதிகமாக எதுவும் இருப்பதுமில்லை என அக்கதாபாத்திரம் குறித்து



Killers of the Flower Moon

விவரித்தேன். லியோவுக்கும் இந்தக் கதாபாத்திரம் பிடித்திருந்தது. 'உங்கள் முகம் திரைப்படக் கலைக்கு ஏற்றதொரு முகம், நீங்கள் மௌனப் படங்களில் கூட நடிக்கலாம், வாய் திறந்து நீங்கள் எதுவும் சொல்ல வேண்டியதில்லை. உங்கள் கண்களே அனைத்தையும் செய்துவிடும், அதை அசைத்தாலே போதுமானது' என அவரிடத்தில் நான் பலமுறை தெரிவித்திருக்கிறேன். அவரை வைத்து என்ன செய்ய முயன்றாலும், அதற்குள் நேர்த்தியாக அவர் பொருந்தி வந்துவிடுவார். இருப்பினும், திரைப்படங்களில் பேசி நடிப்பதில் அவருக்கு ஒருவிதமான ஈர்ப்பு இருப்பதும் எனக்கு தெரியும்.

பிறகு, இக்கதாப்பாத்திரம் தொடர்பாக எனக்குள்ளும் சில கேள்விகள் எழுந்தன. யார் இந்தத் துப்பறியும் நிபுணர்கள்? வாஷிங்டனில் இருந்து வரும் இவர்கள், ரயிலில் இருந்து இறங்கி, அந்த நிலத்தில் கால் வைக்கிறார்கள். அங்கு ராபர்ட் டி நிரோவைப் பார்க்கிறார்கள். வேறு சிலரையும் பார்க்கிறார்கள். அதோடு, அங்கேயே, 'இந்த இன அழிப்பை யார் செய்திருப்பார்கள்' என்பதை வெகு இயல்பாகவே அவர்களால் உணர்ந்துகொள்ள முடியும். பார்வையாளர்களும் இதை எளிதில் கணித்துவிடுவார்கள். பார்வையாளர்கள் நம்மை விட அதிகக் கூருணர்வுமிக்கவர்கள். அதனால், இந்தத் துப்பறியும் நிபுணர்கள், முன்பே எல்லோரும் உணர்ந்துவிட்ட ஒன்றைத் தேடிக்கொண்டிருக்கும் இரண்டரை மணிநேரத் திரைப்படத்தை நாம் பார்க்கப் போகிறோம் என எனக்குள் ஓர் எண்ணம் உண்டாகியது. அது காவலர்களின் விசாரணை தொடர்பான ஆக்கமாக இருந்தது. புத்தகத்தில் அது சரியாக அமைந்திருக்கிறது. எனினும், காவல்துறையினரின் விசாரணை நடவடிக்கைகளை ஒரு திரைப்படமாகப் பார்க்க முடிகின்ற என்னால் அதை ஒரு கதைச் சூழலாக அமைக்க முடியாது. அதை எப்படிச் செய்வதென்றும் எனக்கு தெரியாது. அதனால், இந்தக் கதையை எங்கிருந்து எழுதத் தொடங்குவது,கதையமைப்பை எப்படி உருவாக்குவது என்று எனக்குத் தெளிவில்லாமல் இருந்தது. இந்தக் கதையில் நாம் என்னச் செய்யப் போகிறோம் என எனக்குள்ளாகவே கேள்வியெழுப்பிக்கொண்டேன். அதனால் இந்தக் கதையைச் சொல்வதற்கு வெவ்வேறு முறைமையை முயற்சித்துப் பார்த்துக்கொண்டே இருந்தோம். இந்தக் குழப்பங்களுடனேயே நாங்கள் எழுதியிருந்த திரைக்கதை இருநூறு பக்கங்களைத் தொட்டிருந்தது. ஓரிரவு நானும் லியோவும் இணை எழுத்தாளரான எரிக் ரோத்தும் எனது மகளும் வேறு சிலரும் இணைந்து ஒன்றாக அமர்ந்து எழுதி வைத்திருந்த திரைக்கதையை வாசித்தோம். முதல் இரண்டு மணிநேரம் எங்களால் திரைக்கதையுடன் ஒன்றிப் பயணிக்க முடிந்தது. ஆனால், அடுத்த இரண்டு மணிநேரம் எங்கள் பொறுமையை திரைக்கதை ரொம்பவே சோதித்துவிட்டது. இது எங்கள் அனைவரின் ஒருமித்த கருத்தாகவும் இருந்தது. கதையின் போக்கில் கொஞ்சம் கொஞ்சமாக எங்கள் ஆற்றல் அனைத்தும் வற்றியிருக்க,

திரைக்கதையை நிறைவுசெய்யும்போது எல்லோரும் சோர்வடைந்திருந்தோம். எனக்கும் அதில் மனநிறைவு உண்டாகவில்லை. இன்னும் இன்னும் அழுத்தமாக, வலிமையாக கதையைச் சொல்ல எனக்கு விருப்பமாக இருந்தது. திரைக்கதையில் மேலும் சில அர்த்த தளங்களை உருவாக்க விரும்பினேன். முழு வட்டத்திற்குள் ஒரு நேர்கோட்டை உருவாக்க விரும்பினேன். ஆனால், அப்படி முதற் பார்வைக்கு நேர்கோடுகளைப் போலத் தெரிந்தவை உண்மையிலேயே சிதறடிக்கப்பட்டவையாகவே இருந்தன.

ஆனால், அதே நேரத்தில் அதிர்ஷ்டவசமாக, ஓக்லஹோமாவுக்குச் சிலமுறை பயணம் செய்யும் சந்தர்ப்பம் எனக்கு வாய்த்தது. ஓசேஜ் நேஷனின் பிரதிநிதிகளைத் தொடர்புகொண்டு அவர்களுடன் இணைந்து கூட்டாக எப்படி இத்திரைப்படத்தை உருவாக்கலாம் என்பது குறித்து ஆர்வத்துடன் இருந்தேன். முதலில், அவர்களுக்கு எங்களை நம்புவதில் சிறிது தயக்கம் இருந்தது. அவர்களைப் பற்றியும் இந்தக் கதை குறித்தும் என்னால் இயன்ற சிறந்த பங்களிப்பை செய்ய முயல்கிறேன் என்பதை அவர்களுக்குப் புரியசெய்தால் அவர்களுடைய நம்பிக்கையை என்னால் ஈட்ட முடியும் எனக் கருதினேன். அவர்கள் என் மீது நம்பிக்கை வைக்கத் தொடங்கினார்கள் என்பதையும் ஏன் நம்பிக்கை வைப்பதில் தயங்கினார்கள் என்பதையும் என்னால் முழுமையாகவே புரிந்துகொள்ள முடிந்தது. முற்றிலுமாக அதைப் புரிந்துகொள்ளவும் செய்தேன். இந்த மனத்தடங்கல்தான் இதன் கதையே. இந்தக் கதை என்பது திருமணத்தின் மீதான நம்பிக்கைதான் இல்லையா? அதில் வெவ்வேறு நிலைகள் இருக்கின்றன, வெவ்வேறு கண்ணோட்டங்கள் இருக்கின்றன, தவறுகள் இருக்கின்றன, வேறு சிலவும் இருக்கின்றன. ஆனால், நம்பிக்கை அங்கு நிலவவே செய்கிறது. ஓசேஜ் குறித்து நான் கற்றுக்கொள்ளத் தொடங்கியது என்னவெனில், கதையில் குறிப்பிடப்பட்டுள்ள அனைத்துக் குடும்பங்களும் இன்னமும் அங்கு இருக்கின்றன. தி பர்கார்ட்ஸ் – தி ரோன்ஸ், ஹென்ரி ரோன் ஆகியவை அங்கு உள்ளன. அந்தக் குடும்பங்களைச் சேர்ந்த இந்தக் காலத் தலைமுறையினர் எங்களிடம் என்ன தெரிவித்தார்கள் என்றால், 'இதை மறந்துவிடாதீர்கள், எர்னெஸ்ட்டும் மோலியும் காதலில் இருந்தார்கள்'. ஏன் அவள் அவருடன் வாழ்ந்தாள்? ஏன் வாழ்ந்தாள் என்பதை விட எப்படி அவளால் வாழ முடிந்தது? ஏன் ஒரு நபர் மற்றொருவருடன் வாழ்கிறார்? இதற்கான பதில் நமக்கு தெரியாது. 'ஏன்' என்பது மற்றொரு சிக்கல், கதையின் மற்றுமொரு கோணம். 'ஏன்' என்பதற்கான பதில், இந்தக் கதையில் 'தன்னையே ஏமாற்றிக்கொள்ளுதல்' என்பதாகும். இந்த 'ஏன்' என்பது அவன் என்ன செய்கிறான் என்பது குறித்த யோசனைகள் அவளுக்கு இருந்திருக்கிறது என்றாலும் கூட அவளுடைய காதல் மிக வலிமையானதாக இருந்திருக்கிறது. தன்னுடைய சந்தேகங்களைத் தனக்குள்ளாக அவள் பொதிந்து வைத்திருந்தாலும் அவள் அவனை நம்பியிருக்கிறாள். அதனால் இதுவொரு காதல் கதையாகிறது. அதன்பிறகு, Zoom மூலம் லில்லியை (Lily Gladstone) நாங்கள் சந்தித்தோம். அவர் நடித்திருந்த 'Certain Women' திரைப்படத்தை எலென் லீவீஸ் என்னிடம் காட்டினார். லில்லி அதில் அபாரமான நடிப்பை வெளிப்படுத்தியிருந்தார். அதன்பிறகு லியோவும் அவருடன் Zoom வழியே கலந்துரையாடினார். ஏனெனில், இந்தக் கதாபாத்திரத்தில் யார் நடிக்கவிருக்கிறார் என்பதில் லியோவுக்கும் அதிக ஆர்வமிருந்தது. வெளிப்படையாகவே, அவர் பூர்வீக அமெரிக்கராக இருக்க வேண்டிய தேவையிருந்தது. ஓசேஜ் பிரதிநிதிகளும் லில்லியை ஏற்று அங்கீகரித்தார்கள். அவர்கள் அங்கீகரிப்பதற்கு முன்பு லில்லியுடனான உரையாடல் நிறைவுற்றதும் லியோ என்னிடம், "அவர் அற்புதமாகத் தெரிகிறார்" எனக் கருத்துரைத்தார். "ஆமாம் பல காரணங்களுக்காக" என நானும் அதை ஆமோதித்தேன். அவரிடம் நேர்மையும் நகைச்சுவை பண்பும் நிறைந்திருக்கிறது, அதை உங்களால் திரைப்படத்தில் உணர முடிந்திருக்கும்.

அவரிடம் ஆழமும் முகத்தில் இனிமையும் குடியேறியிருந்தது. எங்களை விட இந்தக் களம் தொடர்பான அவருடைய அறிவு பெரியது என்பதில் எங்களுக்கு முழு நம்பிக்கை உண்டாகியது. அதாவது, அவருக்கு அந்த மக்களை நன்கு தெரிந்திருந்தது, அந்தச் சூழலை அவரால் நன்கு புரிந்துகொள்ள முடிந்தது, குழப்பங்களையும் அவலச் சூழலையும் அவரால் உணர்ந்துகொள்ள முடிந்திருந்தது, அத்துமீறல்களை ஆழமாக உள்வாங்க முடிந்தது. திரைக்கதை வாசிப்பிற்கு ஒரு வாரத்திற்குப் பிறகு லியோ என்னிடம் உரையாடினார். கதையில் எர்னெஸ்ட்டுக்கும் மோலிக்கும் இடையில் காதல் இருக்கிறது என்பது எப்போதும் எங்கள் சிந்தனையில் ஊர்ந்தபடியே இருந்தது. உண்மையில், விசாரணை முடிவுறும் வரை அவள் அவனை விட்டு பிரியவே இல்லை. நாங்கள் சில காட்சிகளை வைத்திருந்தோம். அதில் எஃப்.பி.ஐ.ச் சேர்ந்தவர்கள் - "எப்படி அவள் இன்னமும் அவருடன் வாழ்கிறாள்?" எனக் கேள்வி எழுப்புவார்கள்.

உண்மையில், அவர்கள் அதைத் தெரிவித்திருக்கிறார்கள். இந்த உண்மைச் சம்பவத்தின் நீதிமன்ற விவாதங்களின் குறிப்புகள் எங்களிடமிருந்தன. அவள் அப்போதும் நீதிமன்றத்தில் இருந்திருக்கிறாள். அவளுக்குப் புரியவே இல்லையா? ஆனால், அவர்கள் இருவரையும் ஏதோ ஒன்று ஆழமாகப் பிணைத்திருந்திருக்கிறது. இந்த விசாரணைக்குப் பிறகுதான் அவள் அவரிடமிருந்து பிரிந்து சென்றிருக்கிறாள். நாங்கள் எங்களுக்குள் கேள்வியெழுப்பிக்கொண்டோம். அது என்னவாக இருக்கும்? அதற்கு நான், "அதுவே இந்தக்

(தொடர்ச்சி 13ஆம் பக்கம்)

(10ஆம் பக்கத் தொடர்ச்சி)

கதையாக இருந்தால் என்ன?" என்றேன். இந்தக் கேள்விகளையெல்லாம், எர்னெஸ்ட் கதாபாத்திரத்தில் யாரோ ஒருவர் நடிப்பதாகவும் டாம் வொய்ட் இதையெல்லாம் எப்படிக் கண்டுப்பிடிக்கிறார் எனும் சூழமைப்பிலேயே நாங்கள் யோசித்துக் கொண்டிருந்தோம். அந்தக் காவல்துறை விசாரணை இப்போது இந்தக் கதைக்குச் சற்றே அதீதமாகத் தோன்றியது. ரொம்பவும் பிரத்தியேகமான அகவயப்பட்ட ஒரு கதையை அது அழுத்துவதாகவும் இருந்தது. அதன்பிறகு, லியோ ஒரு வாரத்திற்குப் பிறகு, ஓரிரவில் மீண்டும் என்னைப் பார்க்க வந்தார். வந்தவர், "இந்தக் கதையின் இருதயம் என்ன?" என்றார். "எர்னெஸ்ட்டும் அவளும்தான் இந்தக் கதையின் இருதயம்" என அவருக்குப் பதிலளித்தேன். அதற்கு அவர், "என்னவாகவும் இருந்துவிட்டு போகட்டும், நான் அதே டாம் வொய்ட் கதாபாத்திரத்திலேயே நடிக்கிறேன். நாம் ஏன் இதை டெக்ஸாஸ் ரேஞ்சரின் தன்மையில் உருவாக்கக்கூடாது?" என்றார். அதுபோன்ற படங்களை நாம் ஏற்கெனவே பாத்திருக்கிறோம். அது உண்மையிலேயே சிறப்பானதுதான். ஆனால், அதையே லியோவும் செய்ய வேண்டுமா? நான் எப்படி அதை வேறுபாட்டுடன் அணுகி உருவாக்க முடியும்? நான் யோசிக்க முயன்றேன். ஆனால், என்னால் இதற்கு ஒரு வழியைக் கண்டுபிடிக்க முடியவில்லை. லியோ என்னை ஆழ்ந்து பார்த்துவிட்டு, "சரி விடுங்கள், வருத்தமடைய வேண்டாம், நான் அந்த எர்னெஸ்ட் கதாபாத்திரத்தில் நடித்தால் எப்படி இருக்கும்?" என்றார்.

**ஓ... அந்தக் கதாபாத்திரத்தில் நடிப்பது அவருடைய யோசனையா? அற்புதம்!!!**

ஆமாம். அவருடைய கேள்விக்கு, "நீங்கள் எர்னெஸ்ட்டாக நடித்தால் நாம் அந்தக் காதல் கதைக்கு இன்னும் அழுத்தம் கொடுப்போம். அவர்கள் இந்தக் கதையின் இருதயமாக இருக்கிறார்கள். இப்போதுதான் நாம் கதையின் மையப் பகுதிக்குள் நுழைகிறோம். ஏற்கெனவே எழுதி வைத்திருக்கும் அனைத்தையும் கிழித்தெறிந்துவிட்டு மீண்டும் திருத்தி எழுதுவோம். எல்லாவற்றையும் மாற்றுவோம். ஸ்டூடியோவில் நீங்கள் எர்னெஸ்ட்டாக நடிக்கப் போகிறீர்கள் என்று சொல்வோம். லில்லியும் அபாரமான நடிகையாக இருக்கிறார். அதனால் நாம் அனைத்தையும் மீண்டும் மாற்றி எழுதுவோம்" என்றேன்.

ஆனால், 'திருத்தியெழுதுதல்' என்பது தவறான வார்த்தை. நாங்கள் முழுமையாக அனைத்தையும் அப்போதுதான் கட்டமைத்தோம். எரிக் ரோத் எனக்கு உதவினார். வேறு சில நண்பர்களும் உதவினார்கள். கேஸினோ திரைப்படத்தின் போதும் இதையேதான் செய்தோம். நானும் நிக் பிலேகியும் சேர்ந்து தொடக்கநிலை குறிப்புகளில் இருந்து ஒன்றாகச் சேர்ந்து எழுதினோம். இந்தப் படத்திற்கான திருத்தியெழுதும்



பணியின்போது நான் ஒரு கட்டத்தில், "ஒரு சிறந்த திரைக்கதையை எழுதியிருக்கிறோம்" என்பேன். அதன்பிறகு மற்றொருவர் வந்து, "ஹேய், இதை ஏன் திரைக்கதையில் சேர்க்கக்கூடாது?" என்பார். அதனால் ஒத்திகை வரையிலும் மீண்டும் மீண்டும் திரைக்கதையைத் திருத்தி திருத்தி எழுதிக்கொண்டே இருந்தோம். ஒத்திகையிலும் திரைக்கதை மெருகேறச் செய்தது. ஓசேஜ் மக்களும் எங்களுக்கு நிறைய உதவினார்கள். நிறைய குறிப்புகளை வழங்கினார்கள். ஓசேஜைச் சேர்ந்த வில்சன் எனும் வழக்கறிஞர் ஒருவர் என்னைப் பார்த்து, "உங்களுக்குப் புரியவில்லை, எங்களுக்கென்று ஒரு வாழும் முறை இருக்கிறது" என்றார். அவர் மிகவும் உறுதியானவர், வழக்கறிஞர், களப்பணியாளர். "நாங்கள் இப்படி வளர்ந்தோம், அப்படி வளர்ந்தோம்" எனக் குறிப்பிட்டு நிறைய விஷயங்களைப் பகிர்ந்துகொள்வார். அவர் எனக்கு எதிராகத் தனது வாதங்களை முன்வைக்கவில்லை. தனக்காகவும் தனது மக்களுக்காகவுமே அவருடைய வாதங்கள் இருந்தன, "இதுதான் நாங்கள். உங்களால் அதைப் புரிந்துகொள்ள முடியாது. உதாரணமாக, நான் இளைஞனாக இருந்தபோது, ஒருமுறை திடீரென புயல் வந்தது. நான் அதிலிருந்து தப்பியோட முயற்சித்தேன். அப்போது எனது பாட்டி, 'உட்கார், உட்கார், புயல் நம்மைக் கடந்து செல்லட்டும், நம்மைத் தழுவி விலகட்டும். இது கடவுளின் பரிசு. இது வாஹ்-கோன் டாஹின் பரிசு. புயலிடமிருந்து தப்பி ஓடாதே. அதை உணர்ந்துகொள்' என்பார். அப்படித்தான் நாங்கள் வாழ்கிறோம்" என்றார்.

அதனால், அதை நான் குறித்து வைத்துக் கொண்டேன். இதுபோன்ற பல குறிப்புகள் அங்குமிங்குமெனச் சேகரித்து வைத்துக்கொண்டேன். உணவு மேஜையில் நடைபெறும் ஒரு காட்சி இருக்கிறது. "உனக்கு கொஞ்சம் விஸ்கி வேண்டுமா?"

என மோலி கேட்பாள். அதைத் தொடர்ந்து இருவரும் மது அருந்தத் தொடங்குவார்கள். லியோவை விட மோலி அதிகளவில் மது அருந்தினாலும், அவனைப் போல அவள் போதையில் வீழ்வதில்லை. இதை நாங்கள் எழுதியிருந்தோம். மேலே, வழக்கறிஞர் குறிப்பிட்டிருந்த வார்த்தைகளை அசைப்போட்டதன் பிறகு, இக்காட்சியை இன்னும் சிறந்ததாக உருவாக்குவோம் என நான் தெரிவித்தேன். "இந்த இடத்தில் மழை பெய்தால் என்ன? புயல் வீசினால் எப்படி இருக்கும்? அதை அச்சுறுத்தும் விதத்தில் அல்லாமல், புயலின் தீவிரத்தை மட்டுமே உணர்த்தினால் என்ன? வாஹ்-கோன் டாஹின் பரிசு. இதைச் செய்ய நீங்கள் அமைதியுடன் இருக்க வேண்டும். இருண்மையான உங்கள் சுயத்தை வெளிப்படுத்தக்கூடாது". இந்த வகையில் அவள் அவனைக் கட்டுப்படுத்துகிறாள். அவன் வெறுமனே அமைதியுடன் காத்திருக்கிறான்.

இப்படித்தான் அது கட்டமைக்கப்பட்டது. இது எங்களுக்கு வேடிக்கையான அனுபவமாக இருந்தது. ஏனெனில், எப்போதும் ஏதாவது ஒரு புதிய விஷயத்தைக் கண்டுப்பிடிப்பது சுவாரஸ்யமாக இருந்தது, அல்லது யாரேனும் ஏதேனும் குறிப்புகளை எங்களுக்கு வழங்கியபடியே இருப்பார்கள். எங்கள் தயாரிப்பாளர் மேரியான் போவரும் (Marianne Bower) பல சிறந்தவற்றைச் செய்துகொடுத்தார். ஓசேஜ் மக்களுக்கும் எங்களுக்குமான தொடர்பு மையம் அவர்தான். அவர் வெவ்வேறு தொழில்நுட்பக் கலைஞர்களுடன், வெவ்வேறு பிரிவுகளில் இருந்தவர்களுடன் சேர்ந்து பணியாற்றினார். ஓசேஜ் மக்கள் குறித்த ஆலோசகர்களுடனும் சேர்ந்து பணிபுரிந்தார். அதனால் உண்மையாகவே இது சுவாரஸ்யமான பணி அனுபவமாகும். "உங்களுக்கு தெரியுமா குடும்பத்தில் ஒரு மூத்த உறுப்பினர் மரணமடையும்போது, குடும்பத்தின் மிக இளைய அங்கத்தினர் அவருடைய சவப்பெட்டியின் மீது நடந்துசெல்ல வேண்டும்" என ஒருமுறை அவர் பகிர்ந்துகொண்டார். இதையும் காட்சிப்படுத்தியே ஆக வேண்டும் எனும் பரபரப்பு எங்களுக்கு உண்டானது.

அதனால் இறுதிச் சடங்கு காட்சி இன்னும் பெரிதாக ஆனது. படத்தில் காட்டப்பட்டிருப்பதை விட அக்காட்சி இன்னும் பெரிதாக இருந்தது. அதை நாங்கள் குறைத்திருக்கிறோம். அதன்பிறகு, சிசிலியர்கள் குறித்த சிறுவயது ஞாபகங்கள் எனக்கு இருந்தன. இதில், ஒரு முக்கிய அம்சம் என்னவெனில், நான் வளரும் காலத்தில் ஏராளமான முதியவர்களின் மரணத்தைப் பாத்திருக்கிறேன். பல இறுதிச் சடங்குகளில் பங்கேற்றிருக்கிறேன். முதிய இத்தாலிய பெண்களும் கறுப்பு உடையில் இருக்கும் சிசிலியர்களும் சாவு சடங்கில் பங்கேற்பார்கள். Salvatore Giuliano திரைப்படம் நினைவிருக்கிறதா? அதுபோன்ற மக்களுடன்தான் நாங்கள் வளர்ந்தோம். அதனால் பூர்வக்குடி மக்களுக்குள் 'ஒப்பாரி பாடல்களை பாடுபவர்களும்' இருப்பார்கள் என்றேன் நான். அதனால் அதையும் படம்பிடித்துக்கொண்டோம். "வீட்டின் முன்னால் நின்று நாங்கள் ஒப்பாரி பாடுவோம்" என அவர்கள் தெரிவித்தார்கள். "அற்புதம், ஒரு தொலைதூரக் காட்சியின் மூலம் இதைப் பதிவுசெய்வோம்" என நான் இதுதொடர்பாக முடிவு செய்தேன்.

ஒருவீட்டையும்வீட்டின் முன்னால்மூன்றுநபர்கள் நின்று ஒப்பாரி பாடுவதையும் படமாக்கினோம். அது சிறப்பாக அமைந்திருந்தது. "அண்மைக் காட்சியில் இதைப் படமாக்கிக்கொள்வோமா?" என என்னிடம் கேள்வியெழுப்பப்பட்ட போது, நான் வேண்டாம் எனத் தெரிவித்துவிட்டேன். "அண்மைக் கோணம் ஒன்றைப் பதிவுசெய்வோம். ஒருவேளை அது தேவைப்படலாம்" என மீண்டும் வலியுறுத்தப்பட்டபோதும்,வேண்டாம் என தவிர்த்து, "காட்சி தொலைதூரமானதாகவும் மேலிருந்து படமாக்கப்படுவதாகவும்தான் இருக்க வேண்டும். அவர்கள் வாஹ்-கோன் டாஹைப் பார்த்து ஒப்பாரி பாடுகிறார்கள். அதை நாம் பார்க்கிறோம். அதோடு, இப்படிக் காட்சி அமைக்கும்போது வீடு மிகச் சிறியதாகத் தெரிகிறது. மனிதர்கள் பரிதாபகரமாகத் தோன்றுகிறார்கள். நாங்கள் எப்படி வாழ்கிறோமோ அதன்படியே காட்சியளிக்கிறோம். நாங்கள் ஒப்பாரி பாடுகிறோம். அது உங்களுக்கு உரத்து கேட்பதில்லை" என்பதாக ஒரு கருத்து வெளிப்படுத்தப்படுகிறது. இப்படித்தான் அது இருக்க வேண்டும்.

**உங்களுடைய அண்மைக் காலத் திரைப்படங்களில் அரசியல் நெடி தூக்கலாகவே இருக்கிறது. 'The Irishman' திரைப்படத்தைப் பார்த்தபோது, 'இந்த மதிப்பிற்குரிய சமூகத்தின் அடியாழத்தில் என்னவாக இருக்கிறது என்பதை இதில் பார்க்கப் போகிறீர்கள்' எனும் உணர்வை அது வெளிப்படுத்துவதாக எனக்கு தோன்றியது. 'Killers of the Flower Moon' நெருப்பை ஏற்றி, 'அதுதான் உண்மையான அமெரிக்காவின் வரலாறு. நீங்கள் பள்ளிக்கூடத்தில் படிக்காத வரலாறு. இதன் மீதுதான் நமது சமூகம் கட்டி யெழுப்பப்பட்டிருக்கிறது. அதை நேர்கொண்டு பார்க்கும் துணிவு அதற்கு இல்லை' என்று நீங்கள் சொல்வதாகத் தோன்றுகிறது.**

ஆமாம். உண்மைதான். ஏனெனில், தெருவில் நின்று அனைத்தையும் பார்க்கும் சூழலில் இருந்து நான் வளர்ந்ததால் அப்படி இருக்கலாம். நமது உணர்வு சரியானதுதான் என்றும் இதைச் சொல்வதற்கு நாம் தகுதியானவர்தான் என்றும் நம்புவதுடன், எனது இந்த அணுகுமுறை தொடர்புடையது. வெள்ளை புரோடஸ்டண்ட் (ஆங்கிலம், பிரெஞ்சு, டச்சு, ஜெர்மன்) மக்களால் உருவாக்கப்பட்ட இந்த நாட்டில் இதுகுறித்துதான் கடந்து இருபத்தைந்து - முப்பது



Killers of the Flower Moon

வருடங்களாக மெல்ல மெல்ல புரிந்துகொண்டு வருகிறேன். அதனால் நாடும் அந்த வகையிலான சிந்தனை அமைப்பிலேயே உருவாக்கப்பட்டிருக்கிறது. அதுஐரோப்பியத்தன்மையிலானது. கத்தோலிக்கமோ யூத மதமோ அல்ல. ஆனால், புரோடஸ்டண்டுகளின் பணி நெறிமுறையிலானது - அது சிறப்பான ஒன்றுதான் என்றாலும் கூட. அதுதான் அடித்தளம். அதன்பிறகு, அதனுடன் அரசியல் மற்றும் அதிகார அமைப்பு இணைந்து, அதனுடையே நிரந்தரமாகத் தங்கிவிட்டது. அதேபோல வளரும் காலத்தில் எனக்கு நெருக்கமாக இருந்த சிலர், தனிப்பட்ட விதத்தில் சிறந்த குணவியல்புகளைக் கொண்டவர்களாக இருந்தாலும் சிற்சில குற்றச் செயல்களில் ஈடுபட்டதால் சில காவலதிகாரிகளால் அதிகளவில் பயன்படுத்தப்பட்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன். அதனால் சட்டப்பிரிவைச் சேர்ந்த யாரையும் நம்ப முடியாது என்கிற மனவுணர்வு எனக்கு உண்டாகியிருக்கிறது. சில நல்ல காவலர்களும் இருந்திருக்கிறார்கள். சில மோசமான அதிகாரிகளும் இருந்திருக்கிறார்கள். ஆனால், என்னுடைய தந்தையின் உலகத்தில் இருந்து, அவரது தலைமுறையில் இருந்து பார்க்கும்போது இது முற்றிலும் வேறானதொரு அனுபவம். பொதுச் சேவைக்காகவும் மக்களுக்கு உதவுவதற்காகவும் அரசியலுக்குள் நுழைவது அற்புதமானது. அவர்கள் அப்படி தன்னலமின்றிப் பொதுச் சேவைகளில் ஈடுபட்டால் அது சிறப்பானதுதான்.

அதுகுறித்த ஒரு திரைப்படத்தை உருவாக்குவீர்களா?

எனக்கு தெரியவில்லை. பொதுச் சேவையில் ஈடுபடுகிற ஒருவரைக் குறித்து யோசிக்கும்போது 'Black Narcissus'-ஸில் வருகிற ஒரு வரிதான் நினைவுக்கு வருகிறது. மதர் சூப்பிரியர் இந்தியாவுக்குச் செல்வதற்கு முன்பு டெபோரா கெர்ரிடம் சொல்வது: எல்லோரையும் விட சிறந்த தலைவர், எவரொருவரையும் விட அதிகச் சேவைப் பணிகளில் ஈடுபடுகிறவரே.

**ஆஸ்கர் விருதுபெற்ற 'The Departed'-க்குப் பிறகு உங்கள் படைப்பாக்கத்தில் ஏதோவொரு மாறுதல் நிகழ்ந்திருக்கிறது எனும் உணர்வு எனக்கு எழுகிறது. விருதுகள் பெரிய விஷயம் இல்லையென்றாலும் இதற்கு மேலும் யாரிடமும் எதையும் நிரூபிக்க வேண்டிய அவசியமில்லை எனும் தன்மையை உங்களிடம் பார்க்க முடிகிறது. அதன்பிறகு நீங்கள் உங்களுடைய படங்களிலேயே மிகச் சிறப்பான மற்றொரு திரைப்படத்தை 'Shutter Island'ஐ உருவாக்குனீர்கள். அது உண்மையிலேயே சற்றே கிறுக்குத்தன்மான (நேர்மறையான விதத்திலேயே) படமும் கூட.**

ஆமாம். மனிதர்கள் அதில் பிளவுப்பட்டவர்களாக இருக்கிறார்கள். நான் அதை விரும்புகிறேன். அதாவது, அத்திரைப்படத்தில் ஒரு வரி வசனம், எண்ணற்ற பல்வேறு பொருள்களை வழங்குவதற்கு வாய்ப்பளிப்பதாகிறது. அது உண்மையிலேயே சுவாரஸ்யமானது. அதைக் கையாள எனக்கு அதிக விருப்பமும் இருக்கிறது. ஆஸ்கார் விருதைப் பொருத்தவரையில், நான் திரைப்படம் உருவாக்கத் தொடங்கியதில்இருந்துமுப்பத்துஏழுவருடங்களுக்குப் பிறகு எனக்கு சிறந்த இயக்குனருக்கான விருது கிடைத்திருக்கிறது. அதுதான் எனக்கு பெரும்



The Departed படப்பிடிப்பில்...

ஆச்சர்யமாக இருந்தது. நான் படம் இயக்கத் தொடங்கியபோது இருந்த அகாதெமி குழுவில் இருந்து இது முற்றிலும் மாறுபட்ட குழு. ஆனால், என்னைப் பொருத்தவரையில் அந்த விருது என்பது கவனக்குறைவால் எனக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்றே கருதுகிறேன். The Departed ஒருமுறை இயக்கி நிறைவுசெய்வது போன்றதுதான். நான் அதிலிருந்து விலகி சில சிறிய படங்களை உருவாக்க விரும்பினேன். எனக்கு தெரியவில்லை. The Departed சாதாரணமாகத் தொடங்கிவிட்டது. பல காரணங்களால் அதை உருவாக்குவது சிரமமான ஒன்றாகவே இருந்தது. அது முற்றிலும் வேறான ஒரு கதை. ஆனால், எங்களுக்குத் தெரிந்த முறையில் அந்தப் படத்திற்காகப் போராடினோம். இறுதியில், படம் திரைக்கு வந்தபோது மக்கள் அதை விரும்பினார்கள். அது சிறந்த படம் என்றோ மோசமான படம் என்றோ எனக்கெனத் தனிப்பட்ட கருத்து இருக்கிறது என்று நான் சொல்லவில்லை. ஏதோவொன்றை நிறைவுசெய்துவிட்டோம் என்கிற உணர்வுதான் அப்போது எனக்கு இருந்தது. அதற்குக் கிடைத்த வரவேற்பைத் துளியும் நான் எதிர்பார்த்திருக்கவில்லை.

எனது அடுத்த திரைப்படமாக 'The Silence'-தான் இருந்திருக்க வேண்டியது. ஆனால், அதற்குள் Shutter Island இடையில் வந்துவிட்டிருந்தது. அதிலும் சில சிக்கல்கள் இருந்தன. ஆனாலும் அடுத்த படமாக இது இருப்பதில் பிழை ஏதும் இல்லை என்கிற உணர்வில் அதை உருவாக்கினேன். எனக்கு திரைக்கதை வழங்கப்பட்டது. அது எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அதில் சில நிலைகள் இருக்கின்றன என்பதை நான் உணர்ந்திருந்தாலும் அதை எப்படி படமாக்குவது என்று தொடக்கத்தில் தெரிந்திருக்கவில்லை.

ஆனால், The Departed திரைப்படத்திற்குப் பிறகு, இனியும் நான் ஸ்டூடியோவுக்காக திரைப்படங்களை உருவாக்கப் போவதில்லை என்பது எனக்கு தெரிந்திருந்தது. ஏனெனில், ஸ்டூடியோவில் இருந்தவர்கள் The Departed-ஐ, இரண்டாம் பாகம் மூன்றாம் பாகம் என எடுக்க விரும்பினார்கள். ஆனால், நான் திரைப்படத்தில் இரு நாயகர்களையும் கொன்றுவிட்டேன். அவர்கள் ஒருவரை வாழ வைக்க விரும்பினார்கள். அந்த வகையில் படமெடுக்க எனக்கு விருப்பமில்லை. அதனால், இதே வகையில் தொடர்ந்து என்னால் திரைப்படங்களை இயக்க முடியாது என்பதை நான் உணர்ந்துகொண்டேன். அதன்பிறகு, Shutter திரைப்படத்தில் இருந்து எனது அனைத்து படங்களுமே ஏதோவொரு வகையில் சுயாதீனமான படைப்புகளாகவே இருந்துவருகின்றன. பாராமௌண்ட் பிக்சரின் நிர்வாகப் பொறுப்பில் இருந்த பிராட் கிரே-தான் என்னைப் பார்த்துக்கொண்டவர். The Departed-ஐ அவர்தான் எனக்கு வழங்கினார். Shutter-க்கு அவர்தான் இசைவு தெரிவித்தார். அதன்பிறகு, அவர் மரணத்தைத் தழுவிவிட்டார். அதிலிருந்து சுயாதீனமாகதான் செயல்படுகிறேன். ஒருபோதும் இனிமேல் என்னால் ஸ்டூடியோவுடன் இணைந்து செயல்பட முடியாது. ●

ராம் முரளி <raammurali@gmail.com>

# காதலும் சார்ந்தவைகளும்

சுஜித் லெனின்
ஓவியம்: Louis Toffoli

**01.**

•

அவள் அவனுடைய தலையைக் கேட்டாள். கொடுத்தான். வழிந்தோடும் உதிரங்களுக்கு மத்தியில் நிர்வாணியை முத்தமிட்டாள். பிறகு தனக்கான வரத்துடன் வாழிடம் சேர்ந்தான்.

•

அவனுக்கான முத்தத்தை அவள் வழங்கியபோது அவனது தலை கொய்யப்பட்டது. மயக்கத்தில் நிறைந்தவன் அப்படியே மரித்தான்.

•

சற்று ஆவேசமாக முத்தமிட்டாள்; தலை அவள் கையோடு வந்தது.

•

வெட்டுப்பட்ட தலையின் உதிரத்தில் தன் தாகத்தைத் தணித்துக்கொண்டாள்.

•

முத்தமும் மரணமும் ஒன்றென்றாள்.

•••

**02.**

•

இலைகள் மட்டுமல்ல
முட்களும் மலர்களும்கூட உதிர்ந்தே போகும்.

•••

**03.**

•



நீ ஆயிரமாவது முறை கேட்ட பின்பு உனக்காக ஒரு கவிதை எழுத ஒப்புக்கொண்டேன்; உன் முகத்தில் அப்படி ஒரு பூரிப்பு; மிக மிகச் சாதாரண சொற்கள் கொண்டு பூசி மெழுகினேன்; உனக்கு அது தெரிந்திருக்க வேண்டும்; அதுபற்றி எதுவும் கூறாமல் ஒரு மழலையெனப் பரிபூரணமாகப் புன்னகைத்தாய்; எனக்குச் சற்று குற்றவுணர்வு தோன்ற கண்களில் நீர் கோர்த்தது; நெற்றிலிருந்து பிரிந்து செல்லும் பஞ்சினை அரவணைக்கும் காற்றைப்போல் அணைத்துக்கொண்டாய்; நான்கு முத்தங்கள் தா என்றேன்; மூன்றைத் தந்துவிட்டு மிச்சத்தை நான் கேட்கக் காத்திருந்தாய்; கேட்டேன்; நாற்பதைத் தந்தாய்; பிறகு, காதல் ஒரு மரணத்தைப்போல் நம்முள் நிலைத்துப்போனது.

•••

**04.**

•

‘ஒன்று சொன்னால் கோபித்துக்கொள்வாயா?’ என்கிறேன்; இடது கண் புருவத்தை மட்டும் உயர்த்தி ‘கோபிப்பேன் என்றால் சொல்லாதே’ என்கிறாய்; அதெப்படி முடியும் என்றவாறு, ‘நீ கோபித்தால் சமாதானம் செய்கிறேன் அல்லது எப்படியெனச் சொல் கற்றுக்கொள்கிறேன்’ என்கிறேன். முகத்தை பரிகாசத்துடன் வைத்துக்கொண்டு ‘எனக்கு அதுபற்றியெல்லாம் எதுவும் தெரியாது’ என்கிறாய்.‘அதனாலென்ன?’ என்றவாறு அந்த ஒன்றைச் சொல்லத்துவங்குகிறேன்; கேட்கிறாய். பிறகு ‘சமாதானம் ஒரு குட்டி முத்தமென உன் நெற்றியின்மீது ஊர்ந்து செல்ல உதடுகள் அனிச்சையாய்த் தம்மை ஒற்றிக்கொள்கின்றன.

•••

**05.**

•

ஒரு எருமை எமோஜியை அனுப்பி ‘அது நீதான்’ என்கிறாய். ஆமோதிக்கிறேன். அதற்குச் சிரிப்பு எமோஜிக்களை அனுப்புகிறாய். நானும் சிரித்து வைக்கிறேன். பிறகு, சூடு சுரணைப் பற்றிப் பேசுகிறாய். இப்போதும் நான் சிரிக்கிறேன். எரிச்சல் மிகுதியில் செத்துத்தொலை என்கிறாய். நீயின்றி எப்படி என வழிகிறேன். ‘தூ’ என காறி உமிழ்கிறாய். ஒரு கண அமைதிக்குப் பின்

'காதல் எல்லாக் கீழ்மைகளையும் சகித்துக்கொள்ளவே விழைகிறது' என்கிறேன். காலம் பேரமைதியுடன் கடக்க, அதன்பின் நீயும் நானும் இன்றுவரை பேசிக்கொள்ளவில்லை. பொதுவாகவே காதலில் பேசிக்கொள்வதற்கு எதுவும் இருப்பதுவும் இல்லை.

•••

**06.**

•

முதல்முறை பார்த்தபோதே 'உன்னை முழுமையாக எனதாக்கிக் கொண்டேன்' என்கிறாய்; அதெப்படிச் சாத்தியம்! 'நானே அறியாமல் என்னை எப்படி நீ உனதாக்கி கொள்ள இயலும்' எனக் கேலி செய்கிறேன். ஒரு மூடனைப் பார்ப்பதைவிடவும் இளக்காரமாய்ப் பார்த்து 'உன்னிடமிருந்து வேறு எப்படியான பதிலை எதிர்பார்க்க இயலும்' என்கிறாய். நான் மீண்டும் அதே தொனியில் ஏதோ சொல்லத்துவங்க கையை உயர்த்தி சைகையிலேயே 'நீ பேசிக்கிழித்தது போதும்' என்கிறாய். நான் தோள்களைக் குலுக்கிக்கொள்கிறேன். என்னை முறைத்தவாறே கடைக்காரரிடம் அட்டைக் கோப்பையில் சர்க்கரை அதிகம் சேர்க்கப்பட்ட தேநீர் ஒன்று கொண்டுவரச் சொல்கிறாய். நான் சர்க்கரை இல்லாத வறத் தேநீர் கேட்கிறேன். இப்போது நம் இருவரையும் பார்த்துக் காலம் உரக்கச் சிரிக்கத் துவங்குகிறது.

•••

**07.**

•

கோயிலுக்கு அழைக்கிறாய். உடன் ஒப்புக்கொள்கிறேன். சற்று ஐயத்துடன் பார்த்துவிட்டு 'பொங்கலுக்கு அலையும் வகையறாவா நீ' என்கிறாய். 'ஆமாம் ஆமாம்' என உன் அறிவை மெச்சுகிறேன். இப்போது நீ தொழுது எழும் வேளையில் சுற்றமெங்கும் இமையாது பார்த்தவண்ணம் திண்ணென்று விரைத்து நிற்கும் எண்ணற்ற இடைகளையும் முலைகளையும் உடல்களையும் விழிகளால் சுவைக்கிறேன். தேங்காய் பழம் பொங்கல் சகிதம் அருகே அமர்ந்து 'கண்களை மூடு' என்றவாறு நெற்றியில் திருநீறு இடுகிறாய். நான் வழமைபோல எல்லாவற்றையும் பணிந்து ஏற்கிறேன்.

•••

**08.**

•

'நீ என் ஆயிரத்து இருநூறாவது காதலி' என்கிறேன். 'பொய் சொல்லாதே!' என்கிறாய். 'பொல்லாத உலகம் உண்மையை ஒருபோதும் ஏற்காது' என்கிறேன். ஓ என்றவாறு 'ஒவ்வொரு காதலைப் பற்றியும் தனித்தனியே சொல்' என்றவாறு வைக்கோல் சுருள்மீது ஒய்யாரமாய்ச் சாய்ந்து நின்று காய்ந்த நெல்லின் அடியை மெல்கிறாய். ஆகா எனத் துவங்கிய என் குரல் உன்னில்பட்டு கொஞ்சம் கொஞ் சமாய்த் தொலைந்து போகிறது. நம் மௌனம் அந்த வெற்றிடத்தில் மிதக்க அன்பு என்னும் எலிக்குட்டி வைக்கோல் சுருளின் மீதேறி துள்ளிக்குதிக்கிறது.

•••

**09.**

•

'உன்னைப் பெற்றதற்குப் பதில் உன் அம்மா ஒரு அம்மிக்கல்லைப் பெற்றிருக்கலாம்'

'இப்போது மட்டும் என்ன குறைந்துவிட்டது என் தலையில் நன்றாகத்தானே மிளகாய் அரைக்கிறாய்'

'இருக்கும் இருக்கும் ஏன் இருக்காது'

'அதைத்தான் நானும் சொல்கிறேன்'

'இப்போது உனக்கு என்னதான் வேண்டும்'

'சொல்கிறேன்' என்னும்போதே உதட்டைக் கோணியவாறு தரையில் 'தொம்தொம்' எனச் சப்தம் வர எதிர்த் திசையில் நடக்கிறாய். 'நான் இவ்வாறு சொல்லவில்லையே' எனக் கத்துகிறேன். எல்லா எதிரொலிகளும் 'தொம்' மில் அமுங்கிப்போகிறது.

•••

**10.**

•

'எனக்கான கவிதையை எப்போது எழுதுவாய்' என்கிறாய்; நமக்கான மரணம் எப்போது வாய்க்கும் என்கிறேன்; மரணமும் கவிதையும் ஒன்றா?' என்கிறாய்; 'இல்லையா!' என்கிறேன்;

'உன்னிடம் போய் கேட்டேன் பார்' எனத் தலையில் அடித்துக்கொள்கிறாய்; 'காசுக்கு பறிக்கும் களையும் கொலையில் சேரும் என்பவனிடம் கவிதை விற்கச் சொல்லல் தகுமா!' என்கிறேன்;

ஒரு வசையை உதிர்க்கிறாய்; காதல் எல்லாவற்றையும் பொறுக்கச்செய்கிறது.

•

இந்தக் கவிதையைக் கயலிடம் கொடுத்தான். வாசித்துப் பார்த்தவள் அந்தக் காகிதத்தில் ஒரு மிதவை செய்து பறக்கவிட்டாள்.

•••

**11.**

•

அ. நாம் அருகருகே இருக்கிறோம்.

ஆ. நாம் அருகருகேதான் இருக்கிறோம்போல!

இ. நாம் அருகருகேவா இருக்கிறோம்?

•

இம்மூன்றிற்கும் என்னிடம் உள்ளதுபோல உன்னிடமும் ஒரு வினாவோ விடையோ இருக்கும்தான் இல்லையா?!.

•••



## 12.

•

உன் சமாதானங்களைக் குப்பைக் கூடையில் போடு என்கிறேன்; கொஞ்சுகிறாய்; உன்மீதான எரிச்சல் சற்று அதிகப்படுகிறது; கெஞ்சுகிறாய்; மேலும் இறுகிப்போகிறேன்; சோர்ந்து நீ அமர்கையில் மூடியிருக்கும் என் இமைகளில் ஈரம் பளபளக்கிறது; நீ உடைந்தவளாய் விசும்புகிறாய்; அருகில் வரும் பூனைக்குட்டி மியாவ்வை நம் காதுகளில் உரசுகிறது; பெருமூச்சுகளோடு நிகழ்விற்குத் திரும்பி மூவரும் அவரவர் வேலைகளில் கவனமாகிறோம். அன்பு சுவர்க் கடிகாரத்தின் நொடி முள்ளில் தொற்றிக்கொண்டு டிக்டிக் என நகர்ந்துகொண்டுள்ளது.

•

## 13.

•

'அப்படி உன்னிடம் என்ன கேட்டேன்' என்கிறேன்.

'நீ கேட்பதை நான் மறுக்கக் கூடாதா என்கிறாய்? ஏற்பதும் மறுப்பதும் பொது!' என்கிறேன்;

'பிறகேன் முறுக்கிக்கொள்கிறாய்' என்கிறாய்; 'கொல்வது நானல்ல' என்கிறேன்;

'இதற்கொன்றும் குறைச்சல் இல்லை' என்கிறாய்;

'எதற்குத்தான் குறைச்சல்' என முணுமுணுக்கிறேன்; 'என்ன என்ன?' என்கிறாய்;

'ஆம். எண்ண எண்ணத்தான் எல்லாம்' என்கிறேன்; 'பைத்தியம்' என்கிறாய்;

ஆமோதித்து 'சற்று முற்றியேவிட்டது' என்கிறேன்;

'ஐயோ நான் அப்படிச் சொல்லவில்லை' என்கிறாய்;

'உண்மைதான் நான்தான் அப்படிச் சொல்கிறேன்' என்கிறேன்.

மௌனம் ஒரு போதையென நம்மைச் சூழ்கிறது. பிறகு, வழமைபோல யார் முதலில் துவங்குவது எனக் காத்திருக்கையில் நம்மைப் பார்த்து ஏளனமாய்ச் சிரித்தவாறு ஒரு கொட்டாவியோடு கடந்து செல்கிறது காலம்.

•••

## 14.

•

'எனக்குத் திருமணமாவிட்டது' என்கிறேன்; 'அதனாலென்ன' என்கிறாய்; பிறகு, 'எல்லாம் சகஜமாகிவிடுகிறது'.

•••

## 15.

•

'முலைகளைப் பற்றி பேசாதே' என்கிறாய்; நான் பதறியவாறு 'கண்ணகி எறிந்த முலையா அல்லது எறியாத முலையா' என்கிறேன்; 'ஓகோ அப்படிப் போகிறதோ' என்கிறாய்; 'ஆம் ஆம் அப்படியும்தான் போகும்' என்றவாறு மடியில் சாய்கிறேன்; 'தலை கோதும் உன் விரல் நுனிக்கு காம்பின் சுவை' என்கிறேன்; 'ஆகா! இருக்கும் இருக்கும்' என்கிறாய்; பெரும் ஆசுவாசத்துடன் ஆமோதிக்கிறேன்.

•••

## 16.

•

'உன்னை எங்கே தேட' என உரக்கக் கத்துகிறேன்; 'இதோ இங்கே வா' என்கிறது மலர்க்கூட்டம்; அருகே சென்று எட்டிப்பார்க்கிறேன்; நீ இருக்கும் இடத்தை காதோரத்தில் கிசுகிசுக்கிறது; அப்படியா! என்கிற ஆச்சர்யத்துடன் புற்கள் காட்டிய திசையில் நடக்கிறேன்; உன்னை நெருங்க நெருங்க உன் வாசம் என்னைக் கிறக்குகிறது; பெருமயக்கத்துடன் உன்னருகே வருகிறேன்; நீ ஒரு தவிட்டுக் குருவியாய் மாறி என்னைப் பார்த்து கரீச்சிட்டபடி பறந்து மறைகிறாய்; இப்போது அந்த இடத்தில் பச்சையும் வெண்மையுமாய்க் காய்ந்து கிடக்கின்றன பீக்கள்.

•••

## 17.

•

'உண்மையாகவே காதலித்தால் அதோ தெரிகிறதே அந்த நட்சத்திரத்தை கொய்து தா' என்கிறாய்; 'கண்களை மூடு' என்கிறேன்; 'முடியாது' என வாதிடுகிறாய்; 'உன் விருப்பம்' என்றவாறு பற்பதிய கன்னத்தில் முத்தமிடுகிறேன். அதிர்விலிருந்து நீ விடுபடும் முன்னரே 'உன் வீட்டுக் கண்ணாடியில் போய் பார் கன்னத்தில் இருக்கும் அந்த நட்சத்திரம்' என்கிறேன். பிறகு, உன் வசைகள் என்னை நெருங்காதபடி தொலைந்துபோகிறேன்.

•••

## 18.

•

நீண்ட நாட்களின் பின் அழைக்கிறாய்; தயக்கத்தோடு பேசுகிறேன்; இயல்பான விசாரிப்புகளின் பின் 'அப்பறம்' என்கிறாய். விநாடிகள் மௌனத்தின் ஆன்மாவை உணர்த்த 'பேசுவோம்' எனச் சொல்லி இணைப்பைத் துண்டிக்கிறேன். நீ மீண்டும் அழைக்கிறாய். நான் சாலையோரம் நிற்கும் முட்செடியின் கொழுந்தைத் தடவியபடி நிற்கிறேன். வெயில் ஒரு குழந்தையைப் போல உடல்மேல் ஏறி விளையாடுகிறது. உன் அழைப்புகளைப் புறக்கணித்தவாறு மெதுவாய் நகர்கிறது என் உடல்.

•••

## 19.

•

'உனக்குக் காதல் பற்றி என்ன தெரியும்' என்கிறாய்;'எனக்கொன்றும் தெரியாது. நீங்கள்தான் சொல்லுங்களேன்' என்கிறேன். 'காதல் புனிதமானது; அந்த அன்பிற்கு நிகர் இவ்வுலகில் எதுவுமில்லை' என்கிறாய். ஓ! அப்படியா! என ஆச்சர்யப்பட்டு முடிக்கும் முன்னரே, 'சை உன்கிட்டபோயி சொன்னேன் பாரு' என்று மூர்க்கத்துடன் விலகுகிறாய். 'புனிதமும் அன்பும் எந்தக் காதலையும் காதலர்களையும் கடைசிவரை உருப்படாமல்தான் செய்யும்' என உரக்கக் கத்துகிறேன். வானும் காகமும் காற்றும் மரமும் சில தூசுக்களும் தம்முள் கடந்து செல்லும் இப்பேரிரைச்சலை ஒரு திடுக்கிடலோடு கடக்கிறது. திரும்பிப் பார்க்க நேரமில்லாது நாம் நடந்துத் தொலைகிறோம்.

•••

## 20.

•

'உன்னை யார்' என்கிறார்கள்; பதிலாய் 'அழகி / பிசாசு / பொம்மை / கடவுள்' எனப் பதில் சொன்னதும் 'கள்ளமாய்' ஒரு சிரிப்பைப் பகிர்கின்றனர். இப்போது எனக்கு இவர்கள் மேல் அளவற்ற இரக்கம் தோன்றுகிறது. சிறிது நேரத்திற்குப் பின் 'எனக்குள் இருக்கும் 'நான்' கேட்கிறது உன்னை யாரென?' இம்முறை பெரும் திடுக்கிடலுடன் 'அதே இரக்கம்' அவர்களில் இருந்து நழுவி என்னைப் பற்றுகிறது. அது கண்டு எல்லாவற்றையும் கடக்கும் பிரபஞ்சமென நீ என்னையும் கடக்கிறாய். அவ்வினாவில் தேங்கி நின்று கரைந்து போகிறேன்.

•••

## 21.

•

'நீர்ச்சொட்டில் மிதக்கும் ஆயிரம் திமிங்கிலங்கள் போன்றது உன்மீது நான் கொண்ட காதல்' என்கிறேன். ஓ என்றவாறு, 'பொய்க்காதல் என ஒப்புதல் வாக்குமூலம் கொடுக்கிறாயா' என்கிறாய். 'ஏன்?' என்கிறேன். 'நீர்ச்சொட்டில் ஒரு மீன் கூட நீந்த இயலாதே' பிறகெப்படி என இழுக்கறாய். 'அட அற்புதமே கடலை நீர்ச்சொட்டெனக் கொள்வதுதானே' என்கிறேன். 'நீ சமாளிக்காதே' என்கிறாய். பெருமூச்சொன்று என்னுள் எழுந்தடங்க இரக்கத்துடன் திரும்பிப் பார்த்தபடி தொலைவில் பாய்ந்தோடுகிறது அலை.

•••

## 22.

•

'ஒரேயொரு முத்தம் தா' என்கிறேன்

'இப்படித்தான் எல்லாம் துவங்கும்' என்கிறாள் கத்தரி;

'ஒன்றே ஒன்றை வைத்து என்ன செய்வாய்' என்கிறாள் வெண்டை;

'உன் மொகரைக்கு அதுமட்டும்தான் கேடு' என்கிறாள் பரங்கி;

'கேள்விகளின்றி நான்கைத் தருகிறாள்' மிளகாய்;

'நாணத்துடன் ஓடி ஒளிகிறாள்' அவரை

'ஏற்றலும் இறைத்தலும் பெறுதலும் விடுதலும் என எல்லாமும் அழகாகிப் போகிறது இந்த அற்பக் காதலில்'.

•••

## 23.

•

'நீ இன்னும் சற்று மெதுவாகவே வா' என்கிறேன். 'ஏன்?' என்கிறாய். 'அதுதான் நம் காதலுக்கு நல்லது' என்கிறேன். முறைக்கிறாய். 'கொஞ்சம் பொறு உனக்கே புரியும்' என்கிறேன். சில ஆண்டுகளின் பின் காய்கறி சந்தையில் சந்தித்துக்கொள்ளும்போது இயல்பாய் விலகி நடக்கிறோம். காதலும் காலமும் உருளையின் மீதும் வெங்காயத்தின் மீதும் கால் பரப்பி உறங்கிக் கிடக்கிறது.

•••

## 24.

•

'எப்போதாவது என்னைப் பற்றி நினைத்ததுண்டா' என்கிறாய்; அக்கேள்வியை எனக்குள்ளேயே கேட்டுக்கொள்கிறேன். இரண்டு மாதங்களின் முன் பலத்த கொட்டுச் சத்தங்களின் ஊடே சிதறிக்கிடந்த கேந்திப் பூக்களில் ஏறி நடந்தபோது உன் நினைவு ஏற்பட்டது என்பதை சொல்லாமல் உன் மனம் கோணாதவாறு லேசாக புன்னகைக்கிறேன். நீயும் பெரிதாக அலட்டிக் கொள்ளாமல் 'இப்போதும் என் முகம் கேந்திப் பூவைப்போல்தான் உள்ளதாயென ஏளனத்துடன் கேட்கிறாய். நான் உனக்குப் பதிலேதும் சொல்லாமல் மிக இயல்பாக



கடிகாரத்தைப் பார்க்கிறேன். உன் அவரது கையில் பற்றியுள்ள கட்டைப் பையில் தேடி எடுத்து ஒரு ஸ்வீட் பாக்ஸை அளிக்கிறாய். ஊரோடு சேர்ந்து நானும் அதை வேடிக்கையெனப் பார்க்க, எதுவும் சொல்லிக்கொள்ளாமல் நடக்கத் துவங்குகிறாய். ஸ்வீட் பாக்ஸின் நெளிந்த ஓரத்திலிருந்து கசியும் இனிப்பு கைகளில் பிசுபிசுக்க தொலையும் உன் உருவத்தை பார்த்தபடி ஓரமாய் நிற்கிறேன்.

•••

25.

•

'இப்போதெல்லாம் நீ வெகுவாக மாறிவிட்டாய்' என்கிறாய்;'இருக்கலாம்' என்கிறேன்;'எல்லாவற்றிலும் ஏதோவோர் அலட்சிய தொனி உள்ளது' என்கிறாய்; 'நான் மறுபடியும் இருக்கலாம்' என்கிறேன்; 'திமிரும்கூட சற்று கூடிவிட்டது' என்கிறாய்; 'நான் அதற்கும் இருக்கலாம்' என்றே பதில் அளிக்கிறேன். புருவங்களை உயர்த்தியவாறு,'உன் இலட்சணத்தைப் பார்த்தாயா?' என்கிறாய்; கழற்றி வைத்திருக்கும் அவளின் செருப்புகளின் இடையே ஐந்தாறு எறும்புகள் உணவை சுமந்து செல்வதைப் பார்த்துக்கொண்டே அனிச்சையாய் 'ம்ம்ம்' என்கிறேன்; என்ன தோன்றியதோ திடீரென நெற்றியில் முத்தமிடுகிறாய். நான் கண்களை நன்றாகத் திறந்து வெறுமையாய் உன்னைப் பார்க்கிறேன். வெளி பற்றிய அக்கறை ஏதுமன்றி இறுக அணைத்துக்கொள்கிறாய். நானும் தோளில் முகம் புதைக்கிறேன்.

•••

26.

•

சோற்றுப் பருக்கையில் பட்டத்திற்கு சங்கிலி வால் ஒட்டித் தந்தது; பொன் வண்டின் மஞ் சள் முட்டையைத் தீப்பெட்டியில் அடைக்காத்தது; பூவரசு இலை கொழுக்கட்டையைச் சண்டையிட்டுப் பிரித்துக்கொண்டதென ஒன்றுமேயா நினைவில் இல்லை என்கிறாய். சலனங்கள் ஏதுமின்றி ஆம் என்கிறேன். புழுதியை முகத்தில் இறைத்தபடி ஓடி மறைகிறது சூறைக்காற்று.

•••

27.

•

மூக்கு கண்ணாடியின் விளிம்பின் மீது ஏறி நின்று பார்க்கிறேன்; 'நரை கூடிய இம்முகத்தில் அப்படி என்னதான் கிடைக்கிறது' என்கிறாய்; 'காதலில் பெறுவதற்கோ தருவதற்கோ ஏதுமில்லை' என்கிறேன். 'பைத்தியம்' என்கிறாய். கறுத்துத் தளர்ந்த உன் மேனியில் அலையென மடிந்துக்கிடக்கும் சுருக்கங்களை அதே விளம்பில் நின்று இரசித்துக்கொள்கிறேன்.

•••

28.

•

வியர்வை வழிந்தோட சிராய்கள் தெறிக்கும் வண்ணம் எக்கிஎக்கி விறகினை உடைக்கிறேன்;

அடிப்பக்கம் நெளிந்த சொம்பொன்றில் நிரப்பிய நீரை அருகில் வைத்துச் செல்கிறாய்; வெயிலும் காதலும் அங்குத் தடயமின்றிக் கதகதப்புடன் நிரம்பிக் கிடக்கிறது.

•••

29.

•

மாடிப் படியில் ஏறிப் போகையில் தவறி விழுகிறாய்; அப்போது அந்தி என்பதால் அருகில் உள்ள வேம்பில் இருந்து சில பறவைகள் கிறீச்சிடுகின்றன; உன்னை மீட்டு நீர்த்தந்து ஆசுவாசம் செய்கிறேன்; இயலாமையுடன் எழுந்து அனிச்சையாய் ஆடைகளைச் சரிசெய்தவாறு என் தோள் பற்றி தாங்கித்தாங்கி நடக்கிறாய்; 'ஒவ்வொரு பற்றிக் கொள்ளலுக்கு முன்பும் சில அடிகளைக் காதலுக்குப் பரிசாய் தருகிறது வாழ்க்கை' என்றவாறு உன் கண்ணீரை நான் காணக்கூடாது என்பதற்காக மறுபுறம் திரும்பிக்கொள்கிறாய். மேலும் சற்றுக் கூடுதலாய் உன்னை இறுகப் பற்றிக்கொள்கிறேன்.

•••

30.

•

சிக்னலில் நின்று யாசிக்கிறேன்;
என் கண்களுக்குள் பார்த்துப் புன்னகைக்கிறாய்;
ஒரு கணத்தில் எல்லாம் நிறைந்துவிடுகிறது.

•••

சுஜித் லெனின் <sujithlenin@gmail.com>

# முயங்கொலிக் குறிப்புகள்

**கயல்**

ஓவியம்: நடேஷ்



## 28. ஏனென்றால்

பதியனிட்ட ரோஜாச் செடியின்
இலைகளை வருடித் தந்து
சீக்கிரமே பூத்துவிடச் சொல்லி
சின்னஞ்சிறுமியொருத்தி
இறைஞ்சுவதுபோல்
உள் பெட்டிக்
குறுந்தகவல்களில்
நலமா
காலை வணக்கம்
உணவருந்தினாயா
உறங்கினாயா
உறக்கத்தில் கனவு வந்ததா
என்றென் உணர்வுகளை நெடுங்காலமாக
நீவிப் பார்த்துக்கொண்டிருக்கிறாய்!

பதிலாக
ஒரு காபி சாப்பிடலாமா என்று
நேரடியாகக் கேட்டிருக்கலாம்
நீ

சிரிக்கும்போது சுருங்கிவிரியுமந்தச் சிறிய விழிகளை,
உள்ளத்திலிருந்து பெருகிஉதடுகளினூடே வழியும்சிரிப்பை,
நீண்ட கால்களை,
நீ எப்போதும் கட்டிக்கொண்டு
அமரும் கைகளை,
பேசுபவளின் மார்பை
பாராததுபோலப் பார்க்காமல்



கண்களை மட்டுமே பார்க்கும் கண்ணியத்தை,
என் விரல்களின் தடவலுக்காகக்
காத்திருக்குமுன் கரிய தாடியை,
வசீகரமான உன் குரலை,
...
....
இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டே
எதை எதையோ பேசியபடியோ
அல்லது
இவையெல்லாம் ஏதுமின்றியோ
இழுத்துவைத்து உன்னை
முதல்முறையாக
முத்தமிட்டிருப்பேன்.

நீ
இன்றுதான்
இதயக்குறி இடத் தொடங்கியிருக்கிறாய்
என் புகைப்படங்களுக்கு.

## 29. இறுதிச்சுற்று

தாளிடப்பட்ட
தனியறைக்குள்
உருவற்ற நறுமணமாய்ப்
பரவுகிற நினைவுகளால்
மூச்சு முட்டியதில்
வெளியேறிவிடத் தவிக்கிறது
ஒரு காதல்.

அறைக்குள் சுற்றி சுற்றி வந்து
கதவைத் திறந்து வெளியேவிடச் சொல்லித்
தீனமாகக் குரல் கொடுக்கிறது
அது.

கதவின் மறுபுறத்தில்
இன்னொரு குரல்
கதவைத் திறந்து தன்னை உள்ளே அனுமதிக்குமாறு
கண்கலங்க யாசித்துக்கொண்டிருக்கிறது.

காற்றுப் புகவும் வழியற்ற
அந்தக் கதவின் இருபுறமும்
இரண்டு ஆன்மாக்கள் கதறுவதை
இமைக்காது நோக்கிக் கொண்டிருக்கிறது
இழுத்துக் கட்டிய நேசச் சங்கிலியின்
இறுதிக் கண்ணி
இறுக்கம் தளர்ந்தபடி.

உதடுகள் மட்டும் மறுகின:
இறுதியாக
ஒருமுறை
ஒரேமுறை
எங்களுக்கிடையே உங்கள் சொற்களை வைக்காதிருங்கள்
போதும்.

(தொடரும்)

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>

# தெனாலிராமனை நேசிக்க முடியவில்லை முல்லாவைப் பிரிய மனமில்லை!

அ.மார்க்ஸ்

என்றார் முல்லா: முல்லா நஸ்ருத்தீன் கதைகள் – தமிழில்: சஃபி; விலை ரூ. ₹160; வெளியீடு: உயிர்மை பதிப்பகம், சென்னை; மின்னஞ்சல்: uyirmmai@gmail.com

ரொம்பச் சின்ன வயதிலிருந்தே எனக்கு முல்லாவுடன் பரிச்சயம் உண்டு. அந்தப் பேற்றை எனக்கு ஏற்படுத்திக் கொடுத்தமைக்காக நான் 'குமுதம்' இதழுக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும். 'நல்லாத்தான் சொன்னாரு முல்லா' என்கிற தலைப்பில் குமுதத்தில், முல்லா கதைகளை வெளியிட்டு வந்தார்கள். ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் குட்டி இலவச வெளியீடாக முல்லா கதைகளின் சிறு தொகுப்பு ஒன்று கொடுக்கப்பட்டதாகவும் ஞாபகம்.

சாண்டில்யன்களையும் ரா.கி. ரங்கராஜனையும் சுஜாதாவையும் ஆவலுடன் வாசித்துக்கொண்டிருந்த காலம் அது. இவற்றுக்கிடையே கண்ணில் தட்டுப்பட்ட முல்லா எல்லோருக்கும் மேலாக நெஞ்சில் இடம்பிடித்துக் கொண்டார். சஃபி சொல்வது போல, பிரிய நண்பராய் மட்டுமல்ல, இனிய தோழராய், பாசமுள்ள தந்தையாய், ஆசைப் புதல்வியாய், இனிக்கும் காதலியாய், எதார்த்த வாழ்வின் தர்க்கங்களால் கெட்டிதட்டிப் போன மனதை இளக்கித் தரும் ஔடதமாய் முல்லா நெருக்கம் கொண்டார். இந்த அனுபவம் என்னைப் போலவே முல்லாவை அறிந்த மற்றவர்களுக்கும் கிட்டியிருக்கும் என நம்புகிறேன்.

இதே காலகட்டத்தில் பாடநூற்களின் வாயிலாக அறிமுகமான தெனாலிராமனுடன் இத்தகைய ஒட்டுதல் எனக்கு ஏற்பட்டதில்லை. பாடநூற்களின் மூலமான அறிமுகம் மட்டும் அதற்குக் காரணமாகவில்லை. வேறு ஏதோ ஒன்று தெனாலிராமனுடன் ஒட்டுதல் ஏற்படுவதற்குத் தடையாக இருந்தது. இத்தனைக்கும், ஒரு வகையில் தெனாலிராமன் நமது உள்ளூர்க்காரர். அரசரையும் பார்ப்பன அரச குருவையும் வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம், மட்டம் தட்டும் அவரது விசேட சாகசம், ரசிக்கத் தக்கதுதான். இருந்தாலும், முல்லாவைப் போல தெனாலிராமன் நம் நெஞ்சில் இடம் பிடித்ததில்லை.



சஃபி மொழியாக்கிக் கொடுத்துள்ள இந்தக் கதைகளை ஒட்டுமொத்தமாய்ப் படிக்கும் போதுதான் இதற்குரிய விடை கிடைக்கிறது. தெனாலிராமன் ஒரு புத்திசாலி, கெட்டிக்காரர், சாதுரியமிக்கவர். யாரிடமும் அவர் தோற்பதில்லை. தன்னை அவமானப்படுத்தியவர்களை அவர் மன்னித்ததேயில்லை. அரசராலும் இனம் காண முடியாத ராஜ துரோகிகளைக் கண்டுபிடிப்பது மட்டுமின்றி, தெனாலிராமன் அவர்களைக் கொல்லாமலும் விடுவதில்லை.

முல்லை பி.எல். முத்தையா தொகுத்துள்ள *48* தெனாலிராமன் கதைகளை என்.ஸி.பி.எச். நிறுவனத்தார் வெளியிட்டுள்ளனர். செப்டம்பர் *1986* தொடங்கி பிப்ரவரி *2006*க்குள் *14* பதிப்புகள் வெளிவந்துள்ளன. முத்தையாவின் மிகச் சிறிய முன்னுரை ஒன்று அதில் உண்டு. தெனாலிராமன் கதைகளைப் பற்றிச் சொல்ல வருகையில், 'மந்திரம், மாயம், தெய்வீகம் எதுவும் ஊடாடமல் தந்திரம், பக்தி, நகைச்சுவை, பகுத்தறிவு இவையே பிரதானமாகக் கொண்டு (இவை) விளங்குகின்றன. வாசகர்களின் அறிவு வளர்ச்சியைக் கருதி, பல்வேறு துறைகளில் நூல்கள் வெளியிடும், முன்னணியில் திகழ்கின்ற 'நியு செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவெட் லிமிடெட்' இந்நூலை



கெட்டிக்காரர்களாக்க வழி தேடுகிறான் அம்மன்னன். முறையான கல்வி பயிற்றுவிப்பதென்றால், இலக்கணம் கற்கவே பன்னிரண்டு ஆண்டுகள் பிடிக்கும். பிறகு இதர சாஸ்திரங்களைக் கற்க வேண்டும். பின்னரே, அறிவுக்கண் திறக்கும். எனவே குறுக்கு வழியொன்றை அமைச்சர்கள் உரைக்கின்றனர்.

'விஷ்ணு சர்மன் என்றொரு கிழப் பிராமணன் உள்ளான். பல்வேறு கலைகளிலும் வித்தைகளிலும் பயிற்சியுள்ளவன். உங்கள் பிள்ளைகளின் அறிவுக் கண்ணைத் திறப்பதற்கு அவனே வல்லவன்' என்பதே அவர்கள் காட்டிய வழி.

விஷ்ணு சர்மன் ஆறே மாதத்தில் அந்த மூன்று மர மண்டைகளிலும் அறிவு கொளுத்தினான். அதற்கு அவன் கண்ட உபாயமே பஞ்ச தந்திரம். அய்ந்து தலைப்புகளில் அவன் சொன்ன 84 பஞ்ச தந்திரக் கதைகளினால் அவர்கள் புத்திசாலிகளாயினர்.

வெளியிடுவதில் எனக்கு அளவற்ற மகிழ்ச்சி' என்பார் முத்தையா.

நமது மரபில் தெனாலிராமன் கதைகள், பஞ்ச தந்திரக்கதைகள், முதலியன வாசகரின், கேட்போரின் 'அறிவு வளர்ச்சியைக் கருதியவை'.

பஞ்ச தந்திரக்கதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஆர்தர் டபிள்யூ ரைடர் (1925) அவற்றைப் 'புத்திசாலித்தனமாக வாழ்வதற்கான கலையைக் கற்றுத்தரும் ஒப்புயர்வற்ற வழிகாட்டி' (Incomparable masters of the art of intelligent living) என்பார்.

பஞ்ச தந்திரம் ஒரு நீதி சாஸ்திரம். நீதி என்பதன் பொருள் Justice அல்ல. வாழ்வை கெட்டிக்காரத்தனமாக வாழ்வதே 'நீதி' (The Wise Conduct of Life) துறந்தவர்களுக்கான தருமம் அல்ல நீதி. மாறாகச் சமூக வாழ்விலுள்ளவர்கள் பாதுகாப்புடனும் வளத்துடனும் உறுதியுடனும் வாழ்ந்து வெற்றி பெறுவதற்கான வழி முறைகளே நீதி என விளக்கமளிக்கிறார் ரைடர்.

கிறிஸ்துவிற்குச் சில நூற்றாண்டுகள் முந்தியதாகச் சொல்லப்படும் 'பஞ்ச தந்திரம்' உருவானதற்குச் சொல்லப்படும் முன்னுரைக் கதையும் இதையே சொல்லுகிறது. ஒரு அரசனுக்கு மூன்று பிள்ளைகள். படிப்பே ஏறாத அந்த முட்டாள் பிள்ளைகளைக்

புத்த ஜாதகக் கதைகள் சற்று வித்தியாசமானவை. மனிதத் துக்கங்களிலிருந்து விடுதலை பெறுவதற்கு அற வாழ்வையே ஒரே வழிமுறையாக உபதேசித்துத் திரிந்த புத்த பகவன், வாழ்வறங்களைக் விளக்குவதற்காக அவ்வப்போது சொன்ன சுமார் 300க்கும் மேற்பட்ட கதைகளே புத்த ஜாதகக் கதைகள்.

குறைந்தபட்சம் கிறிஸ்துவுக்கு முந்திய மூன்றாம் நூற்றாண்டிற்கு முன் தொகுக்கப்பட்டவை இவை. பாலி மொழியிலிருந்து பேரா. ஈ.பி. கோவெல் தலைமையில் மொழிபெயர்க்கப்பட்ட 537 கதைகள் ஆங்கிலத்தில் கிடைக்கின்றன.

கோதம புத்தருக்கு முன், 'எண்ணில் புத்தர்கள்' தோன்றியதாகக் கருதுவது புத்த மரபு. போதி சத்துவர்களாகப் பகவான் புத்தர் சொன்ன கதைகளே இவை. எந்தச் சந்தர்ப்பத்தில் எங்கே புத்தர் இந்தக் கதையைச் சொன்னார் என்கிற முன்னுரையுடன் இவை தொடங்கும். கதைக்குப் பின் கதைமாந்தர்கள் ஒவ்வொருவரும் இப் பிறவியில் யாராக உள்ளனர் எனப் புத்தர் விளக்க, கதை

முடியும். அற அடிப்படையிலான திறன் சார்ந்த வாழ்வை வற்புறுத்தியவர் புத்தர். இந்த அறங்களை விளக்கும் முகமாக இக் கதைகள் அமைந்தன.

ஆக ஏதோ ஒரு வகையில் வாழ்வாங்கு வாழ்வதற்கான வழிமுறைகளைச் சொன்னவையாக நமது மரபுக் கதைகள் அமைந்தன. மிகப் பழைய பஞ்ச தந்திரங்களானாலும் சரி; மிகச் சமீபத்திய (கிருஷ்ண தேவராயர் காலத்திய) தெனாலிராமன் கதைகளானாலும் சரி; அவை நிகழ் வாழ்வின் விதி முறைகளையும் தர்க்கங்களையும் விளக்கி அவற்றிற்கேற்ப வாழ்வை அமைத்து முன்னேறத் தோன்றியவை.

முல்லாவின் கதைகள் இந்த இடத்தில்தான் வேறுபடுகின்றன. முல்லாவை நம்மில் ஒருவராய் உணர்ந்து நெருக்கம் கொள்ளும் தருணம் இதுதான். முல்லா நிகழ் வாழ்வின் தர்க்கங்களை ஏற்பதில்லை.

முல்லா அவற்றைக் கலைத்துப் போடுகிறார். முல்லா சாதுரியமானவர் அல்ல. இன்றைய வாழ்வு மதிப்பீடுகளின்படி வெற்றி பெற்றவருமல்ல. அவரது சாதுரியமெல்லாம் பேச்சில் மட்டுமே.

அவர் பல ஞானவான்களையும் பிரதாபங்களைக் கொட்டியளக்கும் போர் வீரர்களையும் எதிர்கொண்டு நம்மைச் சிரிக்க வைத்தவர்தான். ஆனால், அவர்களுக்கும் மேலாகத் 'தன்னை நிறுவிக் கொள்வதன்' மூலம் அவர் அதைச் செய்வதில்லை. 'வீரப் பிரதாபம்', 'ஆன்மீக குரு' முதலிய கதைகளை ஒரு முறை வாசித்துப் பாருங்கள். தன்னை முட்டாளடித்துக் கொண்டே அவர் ஞானவான்கள், மகா வீரர்களின் அதிகாரங்களைக் கலைத்துப் போடுகிறார். முல்லாவிடம் காணப்படும் 'சுய எள்ளலை' நமது மரபில் காணவே முடியாது. முல்லா ஒரு புத்திசாலித்தனமான முட்டாள் (Wise fool).

எந்த நீதியையும் அவர் சொல்வதில்லை. எந்த அற போதனையையும் அவர் செய்வதில்லை. பதில் சொல்ல முடியாத எந்தக் கேள்விக்கும் அவரிடம் நீங்கள் விடை தேட முடியாது. அவருக்கு அதைப் பற்றியெல்லாம் 'எதுவும் தெரியாது'. அவரே சொல்வது போல (பள்ளி என்ற கதையில்) விஷயங்களை உண்மையில் அதனதன் தன்மையில் அப்படி ஏன் இருக்கின்றன? என்பது குறித்த சிந்தனையை உசுப்புவதே அவரது பணியாக அமைகிறது. வழக்கமாக நாம் உலகைப் பார்க்கும் முறையிலிருந்து நம்மைத் திசை திருப்பி விடுகிறார் முல்லா.

எதார்த்த வாழ்வின் அர்த்தங்களை (Meaning) அவர் கலைத்துப்போடுகிறார். ஆளைவிட ஆடைக்குத்தான் இங்கு மரியாதை எனில், விருந்துப் பலகாரங்களை அந்த ஆடைக்கு அர்ப்பணிப்பதுதானே சரியாக இருக்க முடியும்? 'அர்த்தம்' (பொருள்), அர்த்தத்தின் பின்னே உள்ள 'ஒழுங்கு' (Order), 'குறியீடு' (Signification), 'அமைப்பு' (System) ஆகியவை குறித்த முன்னூக்கங்களையும் நம்பிக்கைகளையும் அவரது பேச்சுகள் கலைத்துப் போடுகின்றன. அவற்றுடன் சமர் புரிகின்றன. தன்னைத்தானே கேள்விக்குள்ளாக்கிக் கொள்ளும் முல்லா அத்தோடு உலகை நிரல் படுத்துவதற்கும் நமது கலாசாரம் பயன்படுத்தும் மரபுகளையும் ஒழுங்கு முறைகளையும் தொடர்ந்து கேள்விக்குள்ளாக்கிக் கொண்டே இருக்கிறார்.

நடைமுறையிலுள்ள தர்க்கங்கள், பகுத்தறிவு சார்ந்த மதிப்பீடுகள் ஆகியவற்றின் தோல்விகள் மீது கவனத்தைத் திருப்பும் முல்லா வெளிப்படையாகத் தெரியும் மேல்மட்ட அர்த்தங்களுக்கு அப்பாலுள்ள இரண்டாம் நிலை அர்த்தங்களின் மீது நம்மை ஈர்க்கிறார்.

பிளட்டோவும் பண்டைய கிரேக்கத் தத்துவஞானிகளும் எழுப்பிய கேள்விகளைத் தாண்டி பின் வந்த தத்துவவாதிகள் யாரும் எதையும் புதிதாய்ச் சொல்லிவிடவில்லை என்றொரு கருத்து உண்டு. பிளட்டோ காலத்திலிருந்து இன்று வரை நமது மொழி மாறாத போது, நமது கேள்விகள் மட்டும் எப்படி மாறும்? என்பார் விட்கென்ஸ்டெய்ன்.

முல்லா நமக்கு புதிய மொழியையோ புதிய தர்க்கத்தையோ, கற்றுத் தந்துவிட்டார் என நான் சொல்ல வரவில்லை. ஆனால், நமது மொழியின் மாறா நிலையை, நமது தர்க்கத்தின் வன்முறையை நமக்கு உணர்த்தி விடுகிறார் முல்லா.

நகைச்சுவை என்பது ஒரு வகை உணர்வோ அறுசுவைகளில் ஒன்று மட்டுமோ அல்ல. உலகை வழமையான பார்வையிலிருந்து விலகிப் பார்க்கும் முறைமைகளில் ஒன்று. (Humor is not a mood. But a way of looking at the world- Wittgenstein) இந்த வகையில்தான் எப்போதும் நகைச்சுவை என்பது ஒரு விமர்சனமாகவே அமைந்து விடுகிறது.

நகைச்சுவை (Humor), 'பைத்திய நிலை' (Madness), கனவு முதலியன அதிகாரங்களுக்கு எதிராகவே அமைவதன் பின்னணி இதுதான்.

இதனால்தான் பாசிசத்தால் நகைச்சுவையை சகிக்க இயலாமலிருந்தது. ஹிட்லர் ஆட்சியில் நகைச்சுவை ஒடுக்கப்பட்டது குறித்த நூலொன்று சமீபத்தில் வந்துள்ளது. ஜெர்மன் மொழித் திரைப்பட இயக்குனரும் எழுத்தாளருமான ருடால்ஃப் ஹெர்ஸலக் எழுதியுள்ள 'Hail Hitler, The Big is Dead' என்கிற அந்த நூலில் சொல்லப்படும் சில செய்திகள் நம்மை அதிர்ச்சிக்குள்ளாக்குகின்றன.

1944ஆம் ஆண்டு, மரியன் எலிஸ் கே என்கிற ஒரு ஜெர்மன் தொழிலாளி மரண தண்டனைக் குள்ளாக்கப்பட்டார். அவர் செய்த குற்றம் 'ஜோக்' ஒன்றைப் பரப்பியதுதான். 'வெறுப்புக் கருத்துக்கள் மூலம் அரசின் போர் முயற்சிகளுக்கு எதிராகச்

செயல்பட்டார்' என்பது அவர் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு. அவர் சொன்ன நகைச்சுவை இதுதான்.

பெர்லின் நகரிலிருந்த வானொலி கோபுரத்தின் மீது ஹிட்லரும் கோயரிங்கும் நின்றிருந்தனர்.

"பெர்லின் நகரவாசிகளைக் குஷிப்படுத்த நான் ஏதாவது செய்ய விரும்புகிறேன்" என்றார் ஹிட்லர்.

"அப்படியானால், நீங்கள் இங்கிருந்து குதிக்கலாமே." இது கோயரிங். இதைச் சொன்னதற் காகவே மரண தண்டனை.

அப்படியும் ரகசியமாகப் பல ஜோக்குகள் நாஜி ஆட்சிக்கு எதிராக மக்கள் மத்தியில் புழக்கத்தில் இருக்கவே செய்தன. அவற்றில் ஒன்றை இங்கே பகிர்ந்துகொள்ளத் தோன்றுகிறது.

ஹிட்லர் ஒரு பைத்தியக்கார விடுதியைப் பார்வையிடச் சென்றார். பைத்தியங்கள் எல்லோரும் ஒழுங்காக உடை உடுத்தப்பட்டு வரிசையாக நிற்க வைக்கப்பட்டிருந்தனர். மருத்துவமனை நிர்வாகம் கடும் சிரத்தை எடுத்துக்கொண்டு அவர்களை ஒழுங்குபடுத்தி வைத்திருந்தது. ஹிட்லர் அவர்களைப் பார்வையிட வந்தபோது, ஒரே நேரத்தில் அனைவரும் கையுயர்த்தி அவருக்கு வணக்கம் சொன்னார்கள். பார்வையிட்டு வந்த ஹிட்லர் ஒரு நபர் மட்டும் வணக்கம் சொல்லாமல் நிற்பதைப் பார்த்து, எரிச்சலுற்றார். 'ஏன் வணக்கம் சொல்லவில்லை?' என உறுமினார். நடுங்கிய அந்த நபர் சொன்னார்: 'மெய்ன் ஃப்யூஹ்ரர், நான் ஒரு நர்ஸ். பைத்தியமல்ல'.



ஹிட்லரின் ஆட்சித் தொடக்கத்தில், புழக்கத்திலிருந்த 'ஜோக்' இது. நாளாக நாளாக கெடுபிடிகள் அதிகமாயின. 'ஜோக்குகள்' மூலம் பாசிசத்தையோ அதிகாரங்களையோ வென்றுவிட முடியும் என்பதல்ல. ஆனால், ஏதோ ஒரு வகையில் அவை ஒடுக்கப்பட்ட மக்களின், மன இறுக்கத்தை நெகிழ்த்துகின்றன. காந்தி ஒரு முறை சொல்லவில்லையா? 'நகைச்சுவை உணர்ச்சி மட்டும் இல்லை என்றால் நான் எப்போதோ செத்திருப்பேன்' என்று. காந்திக்கு மட்டுமன்று, நாம் எல்லோருக்கும் பொருத்தமானதே இது.

நமது அரங்கமரபில் 'விதூஷகர்கள்' நாயகர்களைச் சுற்றி எழுப்பப்படும் அதிகாரங்களைக் குலைத்துப் போடுவதைக் காண முடியும். வீரப் பிரதாபங்களுடன் அரங்கில் முன்னிறுத்தப்படும் நாயகனை ஒரு விதூஷகன் வெகு சாதாரணமாகக் கிண்டலடித்து விடுவான்.

ஒருவகையான 'அந்நியமாதல்' உத்தியாகவும் அது விளங்கும். இந்த நிலை, எம்.ஜி.ஆர், சிவாஜி என்கிற 'சூப்பர் ஹீரோக்கள்' உருவானபோது ஒழிந்தது. கதாநாயகர்களுக்குச் 'சூத்து' கழுவுபவர்களாக நகைச்சுவை நடிகர்கள் மாற்றப்பட்டனர். கவுண்டமணி காலத்தில் கொஞ்சம் நிலைமை மாறியது. ஆனால், அதனாலேயே 'சூப்பர் ஸ்டார்' ரஜினி தனது படங்களில் அவரைத் தவிர்க்கக் கூடிய நிலையும் உருவாகியது.

சின்ன வயதில் நமக்கு நெருக்கமாக இருந்த முல்லா, நமக்கு வயதாக ஆக அந்நியமாகிப் போகும் நிலையை சஃபி தனது கவிதையொத்த முன்னுரையில் சுட்டிக் காட்டியுள்ளார். வாழ்வின் தர்க்கங்களுக்கு நாம் பலியாகிப் போவதன் விளைவு அது. எந்த ஒரு பிரச்சினையும் கெட்டிக்காரத்தனமாக மட்டுமே அணுகுவதற்கு நாம் நம்மைத் தயார்படுத்தி வைத்துள்ளோம். சூழலின் இயங்கு விதிகளை அதற்காகவே நாம் அறிந்து வயப்படுத்துகிறோம். இதன்மூலம் நாம் வெற்றி பெறுவது உண்மைதான். ஆனால், இந்த வெற்றியினூடாக நாம் சூழலுக்குள் அமிழ்ந்து விடுகிறோம். ஆனால், முல்லா பலமுறை சூழலின் விதிகளுக்கு எதிராகவே, எதிர் வினையாற்றுகிறார். தான் பொற்காசுகளை மறைத்து வைத்த இடத்தில் ஒட்டகச் சாணம் இருப்பதைப் பார்த்து அவர் பதறுவதில்லை. 'யார் இதை எடுத்துச் சென்றிருப்பார்' எனத் துப்பறியத் தொடங்குவதுமில்லை. மாறாக மலை உச்சிக்கு ஒட்டகம் எப்படி வந்தது என்ற வியப்பில் ஆள்வார். சூழலின் விதிகளை உணர்ந்து இயங்காமல் அவர் 'தப்பு' செய்கிறார். ஆனால், அதன் மூலம், சூழலில் அமிழ்ந்து விடாமல் 'தப்பி' விடுகிறார். பிழை செய்கிறார்; அதனால் பிழைத்து விடுகிறார். ஆனால், நாமோ வெற்றி பெற்றுச் சூழலுக்குள் அமிழ்கிறோம். நமது தனித்துவத்தை இழக்கிறோம்.

சற்றே நம்மை இந்தத் தர்க்கத்தின் வன்முறையிலிருந்து தப்புவதற்கு உதவி செய்த சஃபிக்கும் இதை வெளியிடும் நிறுவனத்திற்கும் நாம் நன்றி சொல்ல வேண்டும். ●

('என்றார் முல்லா' நூலுக்கு எழுதப்பட்ட முன்னுரை)

# என்றார் முல்லா

## சில முல்லா நஸ்ருதீன் கதைகள்

தமிழில்: சஃபி

### வீடு கட்டுதல்

ஒரு நாள், முல்லாவின் மனைவி மதப் பிரசங்கக் கூட்டத்துக்குப் போய்விட்டு வீடு திரும்பினார்.

மனைவியைப் பார்த்து முல்லா, "பிரசங்கி என்ன போதித்தார்?" என்று கேட்டார்.

"சட்ட ரீதியான மனைவியுடன், இரவு நேரத்தில் உறவு கொண்டால், அவருக்காகச் சொர்க்கத்தில் மாளிகையொன்றை இறைவன் கட்டுவான் என்று பிரசங்கி சொன்னார்" என்று முல்லாவின் மனைவி பதிலளித்தார்.

முல்லாவும் மனைவியும் பின்பு படுக்கையறைக்குப் போனார்கள் முல்லா மனைவியைப் பார்த்து, "வா, இருவரும் சொர்க்கத்தில் ஒரு மாளிகை கட்டுவோம்" என்றார். அப்படிச் சொல்லிவிட்டு இருவரும் உறவு கொண்டனர்.

சிறிது நேரம் கழித்து, முல்லாவின் மனைவி அவரிடம், "உங்களுக்கு மட்டும் ஒரு வீட்டைக் கட்டிக்கொண்டீர்கள், இப்போது எனக்கும் ஒரு வீட்டைக் கட்டிக்கொள்ள வேண்டும். தயாராகுங்கள்" என்றார்.

அதைக் கேட்டுவிட்டு, "உனக்காக ஒரு வீட்டைச் சுலபத்தில் என்னால் கட்டிவிட முடியும். ஆனால், உன்னுடைய தந்தைக்கும் தாயாருக்கும் கூட வீட்டைக் கட்ட நீ ஆசைப்படுவாயோ என நான் பயப்படுகிறேன். உனது பெற்றோர்களுக்கு மட்டுமல்ல, உனது மொத்த குடும்பத்திற்கும் உறவினர்களுக்கும் கூட வீடு கட்ட நேரிடலாம். அதைக் கண்டு நம்மைப் படைத்துப் பரிபாலிக்கும் இறைவன் கோபப்படக்கூடும். ஒரு வீடே நாமிருவருக்கும் போதும்" என்று களைப்பில் முனகினார் முல்லா.

### ஊர் வாய்

ஒரு நாள் முல்லாவும் அவரது பையனும் சந்தைக்குச் சென்றனர். அவர்களிடம் ஒரேயொரு கழுதை மட்டுமே இருந்ததால், பையனை மட்டும் கழுதையில் ஏற்றிவிட்டு முல்லா நடந்து சென்றார்.

அதைப் பார்த்த பக்கத்து வீட்டுக்காரர் திகைப்படைந்தார்.

"காலம் போகிற போக்கைப் பாருங்கள். இக்காலத்துக் கல்வி இதைத்தான் கற்றுக்கொடுக்கிறது போலும்! வயதான மனிதன் நடந்துபோக, சோம்பேறி இளைஞன் சொகுசாகக் கழுதையிலேறிச் சவாரி போகிறான்" என்று புகார் சொன்னார்.

அதைக் காதால் கேட்டுவிட்ட முல்லாவின் மகன், "நான் முன்னமே உங்களிடம் இப்படி நடக்கும் என்று சொல்லவில்லையா?" என்று சொல்லிக்கொண்டே கழுதையின் மீதிறிருந்து இறங்கி, முல்லாவைக் கழுதையில் ஏற்றி உட்கார வைத்தான்.

கொஞ்ச தூரம் அவர்கள் நடந்தவுடன் அவ்வழியாகப் போய்க்கொண்டிருந்த சிலர், "கொடுங்கோலா! வளர்ந்த ஆளான நீ சுகமாகக் கழுதையில் போக, பச்சிளம் பையனைப் புழுதியில் தடுமாறி நடக்க வைக்கிறாயே உமக்கு எப்படி மனது வந்தது?" என்று சொல்லி முல்லாவைப் பார்த்துக் கூப்பாடு போட்டு வைதனர்.

அதைக் கேட்ட தந்தையும் தனயனும் சேர்ந்து கழுதையின் மீது ஏறிக்கொண்டனர்.

அடுத்த ஊரை அவர்கள் அடைந்த போது, சில பேர், "இதயமில்லாதவர்களே! உங்களது கனத்த சரீரத்தால் அந்த வாயில்லா ஜீவனைக் கொல்லவா



பார்க்கிறீர்கள்?" என்று சொல்லி ஆத்திரத்துடன் அவர்கள் மீது கல்லெறிய முற்பட்டனர்.

ஊரின் கோபத்தை உணர்ந்த பிறகு இருவருமே கழுதையைவிட்டுக் கீழிறங்கி அதன் பின்னாலே மெதுவாக நடக்கத் தொடங்கினர்.

அவர்கள் அடைய வேண்டிய ஊரின் வாயில் நெருங்கிய போது, சில பிச்சைக்காரர்கள், அக் காட்சியைப் பார்த்து, "சரியான முட்டாள்கள்! அவர்களின் கழுதை அவர்களைச் சுமந்து செல்லாமல், அவர்களை வழி நடத்திப் போகிறது!" என்று சொல்லி தந்தையையும் தனயனையும் பார்த்து ஏளனமாக நகைத்தனர்.

**ஊடாட்டம்**

ஒரு தடவை தன்னை மகிழ்வித்ததற்காக அரசர், முல்லாவுக்கு விலையுயர்ந்த ஜாதிக் குதிரைகளில், தேர்ந்தெடுத்து ஓர் ஆண் குதிரையைப் பரிசளித்தார்.

முல்லாவிடம் அந்தக் குதிரை ரொம்ப நாள் தங்கவில்லை. ஒரு தடவைக் கட்டறுத்துக்கொண்டு காட்டுக்குள் ஓடிவிட்டது.

அதைக் கேள்விப்பட்டு பக்கத்து வீட்டுக்காரர்கள் முல்லாவிடம் வந்து துக்கம் விசாரித்தார்கள்.

"அது உங்களுக்குப் பேரிழப்பாக இருக்கலாம்!?" என்றனர் அண்டை வீட்டார்.

"அது சரியாகவும் இருக்கலாம; அது தவறாகவும் இருக்கலாம்!" என்றார் முல்லா.

ஒரு வாரம் கழித்து காட்டுக்குள் ஓடிப்போன அந்தப் பொலிக் குதிரையானது ஏழு பெண் குதிரைகளுடன் திரும்பி வந்தது.

அந்த விஷயத்தைக் கேள்விப்பட்டு முல்லாவைப் பாராட்டுவதற்காக அண்டை வீட்டார்கள் அவர் வீடு நோக்கி படை எடுத்தனர்.

"முல்லா நீங்கள் அதிர்ஷடக்காரர். மகிழ்ச்சியாக இருப்பீர்கள்!" என்று முல்லாவைப் புகழ்ந்தனர்.

"அது சரியாகவும் இருக்கலாம்; தவறாகவும் இருக்கலாம்!!" என்றார் முல்லா.

பக்கத்து வீட்டுக்காரர்கள் வந்துவிட்டுப் போய் ஒரு நாள்தான் கழிந்திருக்கும். அதற்குள் முல்லாவின் மகன் புதிதாக வந்த குதிரையொன்றின் மேலேறி விளையாடியபோது கீழே விழுந்து தனது கை கால்களை உடைத்துக்கொண்டான்.

அதைக் கேள்விப்பட்டு பக்கத்து வீட்டுக்காரர்கள் முல்லாவிடம், "விதி உங்களிடம் கொடுமையாக விளையாடுகிறது!" என்றனர்.

அதற்கு, "அது சரியாகவும் இருக்கலாம்!; தவறாகவும் இருக்கலாம்!!" என்றார் முல்லா.

அறுவடைக் காலத்தில் மன்னரின் படைகள் முல்லாவின் கிராமத்திற்குள் நுழைந்தன.

படைக்குப் புதிதாக ஆட்கள் தேவைப்பட்டதால், கண்ணில் பட்ட இளைஞர்களெல்லாம் வீரர்களால் தூக்கிக்கொண்டுப் போகப்பட்டனர்.

முல்லாவின் மகனுக்கு குதிரையிலிருந்து விழுந்து பட்ட காயம் ஆறாமலிருந்ததால் "அவன் நோயாளி படைக்குத் தேறமாட்டான்" என்று படைவீரர்கள் அவனை விட்டுவிட்டனர்.

அதைக் கேட்டு, மகனை, உறவினர்களை, இதர சொந்தங்களைப் போரில் இழந்த துர்பாக்கியசாலிகளான பக்கத்து வீட்டுக்காரர்கள் முல்லாவின் மகன் தப்பித்ததைப் பார்த்துவிட்டு, "முல்லா, எங்கள் எல்லோரையும் விட நீங்கள்தான் கூடுதல் அதிர்ஷடசாலி!!" என்றனர்

"அது சரியாகவும் இருக்கலாம்; தவறாகவும் இருக்கலாம்!!" என்றார் முல்லா.

**வித்தியாசம்**

முல்லா புதிய நீதிபதியாக நியமிக்கப்பட்டார். புதிதாகப் பணிக்குச் சேர்ந்த ஆர்வத்தில் முல்லா தனது ஊரில் இருந்த எல்லாத் தவறுகளையும் உடனடியாகச் சரிப்படுத்தத் துடியாய்த் துடித்தார்.

சந்தையிலிருந்து எரிச்சலுடன் திரும்பிய முல்லாவின் மனைவி அவரைப் பார்த்து, "இன்று காலை ஒருவன் பசி மயக்கத்தில் கீழே விழுவதைப் பார்த்தேன். ரொம்ப பலவீனமாக

அவன் காணப்பட்டான். இது சரியில்லை! ஏழைகள், நாளுக்கு நாள் ஏழையாகிக்கொண்டே போகிறார்கள். பணக்காரர்கள், பணக்காரர்களாகிக் கொண்டிருக்கிறார்கள். ஏன் சில மக்கள் பசியாலும் கோபத்தாலும் துடிக்க வேண்டும்? ஏன் சில நபர்கள் அதிகம் உண்டு உடலில் கொழுப்பேறிப் போய் நோயால் அவதிப்பட வேண்டும்? நம் காலடியில் இருக்கும் பூமி எல்லோரையும் போஷிக்க வல்லது. காசு மேல் காசு சேர்ப்பதால் என்ன பலன்? நீங்கள் உண்மையான சகோதரர்கள் போலவும் மெய்விசுவாசிகள்போலவும்எல்லாவற்றையும்பகிர்ந்து வாழ வேண்டும் என்பதை எல்லோர்க்கும் போய் எடுத்துச் சொல்லுங்கள். பயப்படாமல் பிரசங்கம் செய்யுங்கள்" என்று முல்லாவை அவசரப்படுத்தி அனுப்பி வைத்தார்.

முதல் நாள் செய்த பணியை தொடர்ந்து, முல்லா மறுநாள் அதிகாலையிலேயே வீட்டை விட்டு வெளியேறிவிட்டார்.

ஒவ்வொருவரிடமும் தனித்தனியாக, வீடுவீடாக சென்று பேசினார். அதுபோக சந்தை, குளிக்குமிடம், சத்திரம், தேநீர் விடுதி, குறிப்பாக பள்ளிவாசலையும் மறக்காமல் சகல இடங்களிலும் மனைவி சொன்ன கருத்தைத் தொண்டை புண்ணாகும் வரை எடுத்துச் சொன்னார்.

இரவு வீடு திரும்பிய முல்லா முகத்தில் திருப்தி நிறைந்திருந்தது.

"அன்பே! பாதிவேலை முடிந்துவிட்டது. எல்லா ஏழைகளிடமும் ஒரே நாளில் எனது கருத்தை அழுத்தமாகச் சொல்லி அவர்களை உடன்பட வைத்துவிட்டேன். பணக்காரர்களைச் சரிக்கட்டுவது மட்டுந்தான் இன்னும் மிச்சமிருக்கிறது" என்றார் முல்லா.

**கடத்தல்**

முல்லா தனது கழுதை மேல் வைக்கோல் பொதிகளை ஏற்றித் தனது தேசத்து எல்லையைத் தாண்டி தினசரி போய்வந்து கொண்டிருந்தார்.

தான் ஒரு கடத்தல்காரன்தான் என்று ஒப்புக்கொண்ட முல்லாவை,இரவு வெகுநேரம் கழித்து களைப்புடன் திரும்பும்போது, எல்லைக் காவலர்கள் அக்குவேறாய் ஆணிவேறாய் சோதனை போட்டனர். அவரது வைக்கோல் பொதிகளைச் சல்லடை போட்டு அலசிப் பார்த்தனர். அதைத் தண்ணீரில் வீசினர். தீயிட்டுக் கொளுத்தினர். இருந்தாலும், அவர்களால் முல்லாவிடமிருந்து களவுக்கான எந்தச் சாட்சியத்தையும் பெறமுடியவில்லை.

முல்லாவும்செல்வந்தராக ஆகிக்கொண்டிருந்தார்.

அப்புறம் முல்லா ஓய்வு பெற்றுக்கொண்டு வேறுதேசத்தில் போய் வசிக்கலானார்.

பல வருடங்கள் கழித்து முல்லாவைப் பழைய சுங்க இலாகா அதிகாரி சந்திக்க வேண்டிய சந்தர்ப்பம் வாய்த்தது.

"இப்போது சொல்லுங்கள் நஸ்ருதீன், உங்களைக் கையும் களவுமாக நாங்கள் பிடித்துவிடாதபடி, அப்படி என்னதான் கடத்திக் கொண்டிருந்தீர்கள்?" என்று பேச்சை ஆரம்பித்தார் அதிகாரி.

"கழுதைகள்" என்று பதில் சொன்னார் முல்லா.

**உண்டு குடித்தல்**

முல்லா நஸ்ருதீன் ஒரு விருந்தில் கலந்துகொண்ட போது ஒரு செல்வந்தன் தனது அங்கிக்குள் உணவுப் பதார்த்தங்களை இரகசியமாகத் திணித்துக் கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டார்.

முல்லா பார்த்ததைப் பார்த்துவிட்ட அந்தத் திருடன், "எனது மனைவியால் இந்த விருந்தில் கலந்துகொள்ள முடியவில்லை. நான்தான் விருந்துப் பட்சணங்களை அவளுக்குக் கொண்டு வருவதாகச் சொல்லி வாக்களித்திருக்கிறேன்!" என்று சொல்லிச் சமாளித்தார்.

பதிலுக்கு ஒரு வார்த்தை பேசாமல் ஒரு கோப்பைத் தேநீரை அந்தச் செல்வந்தனின் அங்கிக்குள் ஊற்றினார் முல்லா.

"என்ன செய்கிறாய்?" என்று கத்த ஆரம்பித்தான் அந்தக் கருமி.

"நீங்கள் கொண்டுப் போவதையெல்லாம் சாப்பிட்டு முடித்தபிறகு உங்கள் மனைவிக்குக் குடிப்பதற்கு ஏதாவது தேவைப்படும் அல்லவா!" என்று சொன்னார் முல்லா.

**இடதா அல்லது வலதா**

"முல்லா, நீங்கள் சகல விஷயங்களைப் பற்றியும் தெரிந்தவர் என்று பெயர் வாங்கியிருக்கிறீர்கள். பிரேதத்தைத் தூக்கிச் செல்லும் போது நான் இடதுபுறம் நிற்க வேண்டுமா அல்லது வலதுபக்கமாக நிற்க வேண்டுமா என்பதை மட்டும் சொல்லுங்கள்!" என்று கேட்டார் பழுத்த வயதுடைய முல்லாவின் அண்டை வீட்டுக்காரர்.

"எந்தப் பக்கம் என்பது ஒரு பிரச்சினையே கிடையாது. நடுப்பக்கத்திலிருந்து மட்டும் விலகிக்கொள்ளுங்கள்!" என்றார் முல்லா.

### இயற்கையின் அமைப்பு

“தந்தையே, குறைவாகப் பேசுகிறீர்கள் அதிகமாகப் பிறர்சொல்வதைக் கவனித்துக் கேட்கிறீர்கள். ஏன் அப்படி?” என்று முல்லாவின் மகன் அவரிடம் கேட்டான்.

“எனக்கு ஒரேயொரு வாயும் இரண்டு காதுகளும் இருக்கின்றன. அதனால்தான்!” என்றார் முல்லா.

### காதுகளுமில்லை குற்றங்களுமில்லை

நீதிபதி சட்ட சிக்கல் மிகுந்த ஒரு வழக்கைப் பற்றி அவரது அறையில் யோசித்துக் கொண்டிருக்கும் போது அங்கே போனார் முல்லா.

“முல்லா, குற்றவாளியை நான் எப்படித் தண்டிக்க வேண்டும் என்பதற்கு ஒரு உபாயம் சொல்லுங்கள்?” என்று நீதிபதி ஆலோசனை கேட்டார்.

“அவன் பேசும் பொய்களைக் கேட்கும் அனைவரது காதுகளையும் இழுத்து ஒட்ட நறுக்கி விடுங்கள்!!” என்று தனது யோசனையைச் சொன்னார் முல்லா.

### திருட்டல்ல - காப்பாற்றுதல்

முல்லா நஸ்ருதீனைச் சதா வெறுத்துவந்த அண்டை வீட்டுக்காரனை ‘எப்படிக் கோபப்படுத்தலாம்’ என யோசித்துக் கொண்டிருந்தார் முல்லா. பக்கத்து வீட்டுக்காரன் செல்வந்தன். ஆனால், பெருங்கஞ்சன். எச்சில் கையால் கூட காக்கையை ஓட்டாதவன்.

ஒரு நாளிரவு முல்லா ரகசியமாகப் பக்கத்து வீட்டுக்காரனின் தோட்டத்துக்குள் நுழைந்து அவனது கோழிக்கூட்டிலிருந்து நல்ல பெரிய கோழியை எடுத்துக்கொண்டு நழுவினார்.

காலையில் தனது பொருளிழப்பைக் கண்டு அந்த பணக்காரக் கஞ்சன் கத்திக்கதறுவதை தனது மனதுக்குள் ஓட்டிப் பார்த்து சந்தோஷப்பட்டுக் கொண்டார் முல்லா.

சிறிது தூரம் நடந்து போனதும் கோழி இறக்கைகளை அடித்துப் படபடத்துக் கூவிக் கதறாமல் இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டார் முல்லா.

ஒருவேளை கனமான சாக்குப் பைக்குள் கோழியைப் போட்டதால் மூச்சுத் திணறி அது அமைதியாகி விட்டதோ என யோசித்துக் கோணிப்பையை திறந்தார் முல்லா. பையைத் திறந்ததுதான் தாமதம், கோழி தனது தலையைப் பைக்கு வெளியே நீட்டிக் கத்தத் தொடங்கியது.

“ஆமாம், நான் நினைத்தது சரியாகப் போய்விட்டது. நான் பணக்காரனின் பேராசையைக் குறித்து அருவருப்பு அடைந்தது போலவே நீயும் அவனது மோசமான குணத்தைப் பற்றி அதிருப்தி கொண்டிருக்கிறாய். அதனால்தான் பலமாகக் கத்துகிறாய். நான் செய்தது திருட்டல்ல, நான் உன்னைக் காப்பாற்றியது ஒரு அவசியமான நற்காரியமாகும்!” என்று சொல்லி கோழியின் தலையை மீண்டும் பைக்குள் அமுக்கிவிட்டு வேகமாக நடையைக் கட்டினார் முல்லா.

### இரண்டு காசுகள் மட்டும்

முல்லா நஸ்ருதீன் ஒரு கடைக்காரனிடம் கடன்பாக்கி வைத்திருந்தார். ஒரு நாள் முல்லா தேநீர்க் கடையில் நண்பர்களோடு அரட்டையடித்துக் கொண்டிருந்த போது அந்தக் கடைக்காரன் அங்கே வந்தான்.

அந்தக் கடைக்காரன், “முல்லா உங்களைப் போன்ற முக்கியமான ஒரு நபர், சமூகத்தில் பெரிய மனுஷனாய் இருப்பவர், கடனைச் செலுத்தாமல் வைத்திருப்பது ஆச்சரியமான விஷயம்” என்று பேச்சைத் தொடங்கினான்.

“நான் உங்களுக்கு எவ்வளவு தரவேண்டும்?”

“இருபது தங்கக் காசுகள்.”

“நாளை நான் ஆறு தங்கக் காசுகள் கொடுத்து கடன் அடைத்தால் மிச்சம் எவ்வளவு தர வேண்டியிருக்கும்?”

“பதினான்கு தங்கக் காசுகள்.”

“நாளை மறுநாள் ஆறு தங்கக் காசுகளைத் தந்துவிட்டால் மீதம் எவ்வளவு?”

“எட்டுத் தங்கக் காசுகள்தான் தர வேண்டும்.”

“அதற்கடுத்த நாள் ஆறு காசுகளைக் கொடுத்துவிட்டால் இன்னும் எவ்வளவு தர வேண்டியிருக்கும்?”

“இரண்டே இரண்டு காசுகள்தான்.”

“அப்படியானால் உங்களைப் போன்ற சமூகத்தில் பெரிய மனிதர் இரண்டு காசுகள் தரவேண்டியதற்காக ஒரு தரமான வாடிக்கையாளரைத் தொந்தரவு படுத்துவது அவமானகரமான விஷயமாகும்” என்றார் முல்லா.

(‘என்றார் முல்லா’ நூலில் இருந்து)

சஃபி <safipsy69@gmail.com>

# இளங்கோவன் கவிதைகள்

ஓவியம்: அமித் பிஸ்வாஸ்



## 1

அந்த நொடியின்
அந்த கணத்தில் நிகழும்
அபூர்வமான ஒரு மரணத்தை
எப்போதும்போல்
கடந்துபோகும் ஒரு வாழ்விற்கு
நாம் பழகிவிட்டோம்
அந்த நொடியின்
அந்தக் கணத்திற்கு
நாம்
நண்பர்களாக
மாறிவிட்டோம்.
ஒரு தேநீரின்
சுவையை அடைவதற்குள்
வறண்டுபோகும் நாவினைப்போல்
இந்த வாழ்வு
அவ்வளவு எளிதாக
மாறிக்கொண்டிருக்கிறது
இதன் இறுதியில்
ஒரு பெரும் கனவாகிய
பெருங்கடல் கரையில் விழுந்து
கரையிலும்
கடலிலும்
தடுமாறிக்கொண்டிருக்கிறது.

## 2

வேனிற்பருவமிது வாதாமர
இலைகள் உதிரத் தொடங்கிவிட்டது
ஒவ்வொரு இலையிலும்
மூங்கில் முட்களால்
பெயரெழுதத் தொடங்கிவிட்டோம்
எத்தனைமுறை எழுதித் தீர்த்தாலும்



முனை ஒடியாத அந்த
முட்களை
ஒவ்வொரு முறையும்
வீசித்தான் எறிந்தோம்.

### 3

இரவு பகலென்ற தெரியாத
பேய்மழையின் நாளொன்றில்
அம்மாவின் அம்மா குளிர்ந்துபோனாள்
அடுப்பெரிக்கவே பஞ்சமென்றிருந்த
எரவானத்து விறகையெல்லாம்
கைப்பிடித்து இறக்கிவைத்த பங்காளிகள்
நேரம்காலம் தெரியாத நேரத்திலும்
வேகைவைத்து வீடுதிரும்பினார்கள்
அவர்களுக்கு
சூடான ஒரு தம்ளர் வரகாப்பியும்
அப்பாவிற்கு ஒரு சுடுநீரும்
ஆற்றாத துயரத்திலும்
ஆற்றிக்கொண்டிருந்த அம்மாவின்
கைகள்
அப்போது குளிரவில்லை.

### 4

சிட்டுக்குருவிகளும் பச்சைக்கிளிகளும்
வந்துபோன தோட்டத்தில்
வாழைகள் குலைதள்ளியும்
மாமரங்கள் பூத்தும்
வரவில்லை தேனீக்களின் கூட்டம்
தென்னை மரமேறவும்
எலுமிச்சையை பறித்துப்போகவும்
ஆட்கள் குறைந்து
இயந்திரங்கள் அறிமுகமாகிவிட்டன
நம் காலத்தின் ஞாபககங்களில்
வவ்வால்கள் ஏன்

அடிக்கடி வந்துபோகின்றன.

5
நீலமலர்களின் நடுவே
பூத்திருக்கும் ஒற்றைப்புள்ளி
வெண்மைதான் நீலத்தின்
நிறங்களை மேலும் மேலும்
அழகூட்டுகிறது.
அல்லிக்குளத்தின் நடுவே
பூத்திருக்கும் ஒற்றை
செந்தாமரையின் இதழ்களாக
யானையின் கண்களில்
ஒளிரும் ஒருதுளி வெளிச்சமாக
வெள்ளைப் பசுங்கன்றின்
முன்நெற்றியில் ஓடிக்கிடக்கும்
ஒரு கருநிறத்தின் மெல்லிய கோடாக
உன் புருவத்தின்
நடுவே ஒரு மின்னல்
ஓடிக்கொண்டேயிருக்கிறது
உச்சிவானத்தின்
மூன்றாம் பிறையாக.

6
பயணத்தின் நடுவே
பழகிவிட்ட தம்பதிகள்
எனது நிறுத்தம் வந்தபோது
உங்கள் ஊர் வந்துவிட்டது
டேக் கேர்
மறுபடியும் பார்க்கலாம் என்றார்கள்
இந்த உத்திரவாதத்தின்
ஒரு நொடியைக்கூட. நீயெனக்கு
வழங்கவில்லை
ஆனாலும் என்ன
உனது பயணம் சிறக்க
வாழ்த்துகிறேன்
டேக் கேர்.

7
பிறை வருமெனக்
காத்திருக்கும் நோன்பு காலத்தில்
அதிகாலை பாங்கு
ஓசையின் திசைநோக்கி
குவியும் கரங்களில்
வந்தமரும் அன்றைய நாள்
அவ்வளவு மென்மையானது
கோடையில் கடந்துபோன
சிறுமழையின் தூறலைப்போலவும்



அசைந்துகொண்டிருக்கும்
இம்மரத்தின் தளிர்களாகவும்
ஒருமுறை வானம் முழுவதும்
பரவியிருந்த ஒளியாகவும்
அந்நாளின் மௌனம்
அந்நாளின் புனிதம்
அமைதியாக கடந்துபோனது.

8
காற்றில் மிதக்கும் கருப்புநிற பலூன்கள்
எடையற்ற ஒரு உடலைப்போல் வெளியெங்கும்
அலைந்துகொண்டிருக்கிறது
மேகங்கள் கலையும்போதெல்லாம்
கீழ்நோக்கியும் வான்நோக்கியும்
போதுமான அளவிற்கு அசைந்துகொண்டிருக்கிறது
தரையிறங்கிவிடத் துடிக்கும் அதன் தவிப்பில்
இரண்டு கால்களையும் உந்திவிடும்போது
வானம் சற்று
அதிர்ந்துதான் போனது.

9
ஓவியம்
ஒரு அழகான கலை
உன்னை வரையும்போதுதான்
கைதவறி விழுந்துவிட்ட
தேநீர்க் கோப்பையாகவும்
உனக்கு வண்ணமிடும்போதுதான்
துண்டு வானமாகவும்
சிதறிக்கொண்டிருக்கிறது
தொட்டியிலிருந்து
வெளியே விழுந்துவிட்ட மீனைப்போல்
சற்றுநேரம் மட்டும்
துடித்துக்கொண்டிருந்தது. ●

இளங்கோவன் <ilangovanperumal@gmail.com>

# சீ. பாஸ்கர் கவிதைகள்



## இயற்கை அன்னையின் கைகள்

ஒன்றாகவே நடந்து வீடடைந்தோம்
நானும் மழையும்
என்னை மட்டும் உள்ளே அழைத்து
தலையைத் துவட்டினாள்
வாசலில் காத்துக்கிடந்த அம்மா
கோபித்துக் கொண்டு வெளியிலேயே
நின்றிருந்த மழைக்கு ஆறுதல் சொல்லி
அரவணைக்கிறது காற்றில் அசைந்தாடும்
மரத்தின் கிளைகள்

## நெடும்பயணம்

எவ்வளவு நெடுந்தூரம்
அவள் கண்களில் விழுந்து
இதயம் பிடித்து
கன்னம் தாண்டி
உதடு வந்து சேர்வதற்குள்
போதும் போதும்
என்றாகி விடுகிறது

## காதல் கரைசல்

கரைந்து போனது
என் 24 காரட் தங்க இதயம்
அவளின்
ராஜதிராவக கண்களில்
விழுந்தவுடன்

## கண்ணீர் சிந்தும் செடிகள்

சாலை ஓரத்தில்
செடிகளை விற்கும் சிறுமி
தாகம் எடுத்து தண்ணீர்
குடிக்கும் போதெல்லாம்
வாடி இருக்கும் செடிகள் மீதும்
தெளிக்கிறாள்
பேரம்பேசி வாங்கியவரிடம்
செடிகளைக் கொடுக்கும்போது
அவளின் கைகளில் விழுகிறது
தண்ணீர் துளிகள்
யாருக்குத் தெரியும்
அந்தத் துளிகள் பிரிந்துசெல்லும்
ஏக்கத்தில் செடிகள் சிந்தும்
கண்ணீராகவும் இருக்கலாம் ●

சீ. பாஸ்கர் <baskee1981@gmail.com>

நோபல் கமிட்டியின் செயல்பாடு, அதைச் சார்ந்துள்ள நடுநிலைமை அல்லது இல்லாமை, படைப்பு உயர்ந்ததா அல்லது மட்டமா என்று ஒவ்வொரு முறையும் பரிசு முடிவைத் தெரிவிக்கும் போது எழும் சர்ச்சைகள் எழுந்து, எழுந்தது போல் அடங்கியும் விடுகின்றன. ஆனால், உலக இலக்கியங்களுக்குத் தரப்படும் பரிசுகள் பலவற்றுக்கும் முன்பாக நோபல் பரிசு இன்றும் ஓர் உயர்ந்த பீடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது.

நோபல் உரைகள் எப்போதும் இலக்கிய ஆசிரியனின் காலத்திய சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலைச் சூழல்களைப் பிரதிபலிக்கும் விதத்தில்தான் வெளிப்படுகின்றன. இந்த உரைகளில் காணப்படும் ஒரு பொது அம்சம் படைப்பாளிகளின் இளமைக் காலமும் அவர்களின் படைப்புகளில் ஆழமாக அது பதிக்கும் விவரணைகளும்தான். இவ்வுரைகள் வாசகர் மனதில் எழுப்பும் சீரிய சிந்தனைகளும் ஆழமான புரிதல்களும் அவற்றைப் பேருரைகளாக மாற்றி விடுகின்றன. ஆனால், அவற்றை என்றும் மாறாத புனித வாக்குகளென சடுதியில் தீர்மானத்துக்கு வரவேண்டிய அவசியத்தை உண்டாக்காது, படைப்பாளியின் நோக்கம், அவன் எழுத்து பிரதிபலிக்கும் சமூகச் சூழல், இலக்கியப் பரப்புக்குள்ளேயே நிகழும் ஒத்த அல்லது மாறுபட்ட கருத்தாழங்கள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்கின்றன.

நோபல் உரைகளை அம்ருதா வாசகர்களின் முன் வைக்கிறோம் - மாதம் ஒன்றாக.

## நதீன் கோர்டிமேர்
## 1991

# எழுத்தும் உயிர்த்து இருத்தலும்

## தமிழில் : ஸிந்துஜா

ஆதியில் வார்த்தை இருந்தது.

வார்த்தை இறைவனுடன் இருந்தது. தான் கடவுளின் படைப்பு என்று தெரிவித்த வண்ணம்; ஆக்கம் என்னும் பொருளுடன். ஆனால், பல

நூற்றாண்டுகளில் உருவான மனித நாகரிகத்தினால் வார்த்தை பல்வேறு அர்த்தங்களைக் கொள்ளலாயிற்று - மதச் சார்புடனாகவும் மதச் சார்பு அற்றும். வார்த்தை நடமாடிய போது அதிகாரம், கௌரவம்; அருமையான, ஆனால், சிலசமயம் தூண்ட வேண்டிய அவசியத்தை உபயோகித்து டி.வி.யில் பிரைம் டைமின் போது தரவேண்டிய வருகை, பிதற்றலான உதட்டோடு ஒட்டாத பேச்சு ஆகியவற்றுடன் வார்த்தை ஒத்துப் போகவேண்டியிருந்தது. பரவெளியில் நீந்தி உபகோள்களைக் கடந்து அது எங்கிருந்து கிளம்பி வந்தது என்று நம்பப் படுகிறதோ அந்த சுவர்க்கத்தை நெருங்கி விடுகிறது. ஆனால், வார்த்தையின் முதல் உருமாற்றம் எனக்கும் என் படைப்பு இனத்துக்கும் கல்வெட்டுகளிலிருந்தும் ஓலைச் சுவடிகளில் இருந்தும் தான் கிடைத்தது. ஒலி காட்சியாகவும் கேட்பது படிப்பதுமாகவுமான அடையாளங்களுடன் அது மாற்றம் பெற்றது.



இதன் பின் எழுத்து வடிவம் உண்டாயிற்று. தோல் ஏட்டிலிருந்து பைபிளின் முதல் அச்சு வடிவம் வரை அது பிரயாணித்து மாறுதல்களுக்கான காலத்தை ஏற்படுத்திக் கொடுத்தது. ஓர் படைப்பாளியின் தோற்றம் இங்குதான் நிகழ்ந்தது. படைப்பாளியின் (ஆணோ பெண்ணோ) உயிர்த்து இருத்தலை இந்தக் கதைதான் உருவாக்கித் தந்தது.

மனித நாகரிகத்தின் மாற்றங்களை எடுத்தியம்பும் வல்லமையை வார்த்தை படைப்பாளிக்கு ஏற்படுத்திக் கொடுத்தது.



உயிர்த்து இருத்தல்...

மனிதர்கள் சுய மரியாதையுடன் நடமாடும் விலங்குகள். உயிர் தரித்தல் என்பது ஒரே நேரத்தில் துன்புறுத்துகின்றதாகவும் சபிக்கப்படுகின்றதாகவும் இருப்பது ஏன் என்ற கேள்வியை எழுப்புகிறது. நாமெல்லாம் இங்கு எதற்காக இருக்கிறோம் என்பது வெறும் இருத்தலியல்கேள்வி அல்ல.பல்வேறு மக்களுக்கு, பல்வேறு சமயங்களில் மடாதிபதிகளும்தத்துவஞானிகளும் இதை விளக்க முயன்றிருக்கிறார்கள். டைனோசர்களைப் போல நாமும் நம்முடைய இந்த ஆயிரமாண்டுக் காலத்தில் இறப்போம் என்று திகைப்பூட்டும் விவரத்தை விஞ்ஞானம் தர முயலுகிறது. ஆனால், அதை முற்றிலும் புரிந்துகொள்ளும் விதத்தில் விளக்கங்கள் தரப்படவில்லை. இனப்பெருக்கம், மரணம், பருவ காலச் சூழல்கள், பூமி, வானம், காற்று, நட்சத்திரங்கள், சூரியன், சந்திரன், வெள்ளம், பேரபாயம் என்று அனைத்தையும் பற்றி மக்கள் விளக்கம் கோருகின்றார்கள். எழுத்தாளர்களின் மூதாதையரான - புராணக் கட்டுக்கதைகளை வைத்து நடமாடும் - வாக்யேயக்காரர்கள் தினசரி வாழ்க்கையில் நடப்பவற்றைத் தம் கற்பனைகளைக் கலந்து மர்ம முடிச்சுக்களைக் கட்டித் தந்தனர், கதை என்ற பெயரில்.

ரோலண்ட் பார்த் கேட்கிறார்: "புராணக் கதையின் குணாதிசயம் என்பது என்ன?" அவரே பதிலளிக்கிறார். "அர்த்தத்தை வடிவுக்குள் கொண்டு வருவதுதான்." அறிந்ததுக்கும் அறியாததுக்குமான இடைவெளியை நிரப்புவதுதான் தொன்மம். இதையே லெவி ஸ்ட்றாஸ், "மாய மந்திரக் கதைகளுக்கும் துப்பறியும் கதைகளுக்கும் இடையே முளைத்த ஒரு வகை!" என்கிறார்.

இருத்தல் என்பதை யார் செய்தது என்ற கேள்விக்குள் நுழைந்தால் நாமாகவே இந்தக் கேள்விக்கான பதிலைக் கற்பனை செய்து கண்டுபிடிக்கிறோம். தொன்மம் என்பது மர்மமும் மீமிகைக் கற்பனையும் சேர்ந்து வடிவெடுத்த ஒன்று - கடவுள்கள், மானுடவியல்பு கொண்ட விலங்குகள், பறவைகள், கனவில் வரும் பிரகிருதிகள் ஆகியவை

தனிமனிதனின் பிறப்பையும் வளர்ச்சியையும் உள்ளடக்கிய மெய்ப்பொருள் மூல ஆராய்ச்சிக்கு வித்திட்டது. இயற்கையை ஏற்றுக்கொள்ளும் மனப்பான்மையையும் மெய்ப்பொருளை ஆராயும் திறமையையும் கொண்டு வந்து சேர்த்ததின் மூலம் மனித உயிர்த்து இருத்தலின் சாத்தியத்தையும் நிறுவியது. எம்மைப் போன்ற படைப்பாளிகள் இதனை முழுவதும் பரிசீலித்து உணர்வதற்காக உருவாக்கப்படுகிறோம். போர்ஹேயின் 'கடவுளின் எழுத்துப் பிரதி' கதையில், சிறையில் சிறுத்தைக் கூண்டில் அடைக்கப்படும் ஒரு கைதி, ஒரு நாளைக்கு ஒருமுறை அவன் இருக்கும் இடத்தில் படர வரும் ஒளியைப் படிக்க முயலுவான். அதைப் போல நாம் சமூகத்தைப் படித்து அறியும் முயற்சியில் அர்த்தங்களை ஏற்படுத்திக்கொள்கிறோம். இந்த விடுவித்துக்கொள்ள முடியாத, சொல்வதற்கு அரிய, பங்கு பெறுதலில் எழுத்து சுயத்தையும் உலகையும் புரிந்துகொள்ளும் தேடலை முன் வைக்கிறது.

கற்பனையின் உச்சத்திலிருந்து விளைகின்றன. மனிதர்களும் அவர்களின் உடனிருப்பவர்களும் கதைக்கு உயிர் தருபவர்கள். நிகோஸ் கசந்தாகிஸ் கூறியது போல, "கதை என்பது உடம்பல்ல; உடம்பை உருவாக்கிய விசைகளைப் பற்றியது."

இயல்பான ஆனால், நூதனமான நிகழ்வு ஒன்று ஏற்படுகையில் அதைப் பற்றி நம்பத்தகுந்த விளக்கங்கள் வெளிவருகின்றன. அப் பதில்களிலிருந்து உயிர்த்து இருத்தல் பற்றிப் புதுக் கேள்விகள் எழுகின்றன. இதனால்தான் தொன்மையின் புராதன அமைப்பை யாரும் புறக்கணிக்க முயலுவதில்லை. அது பழமையானது; எனவே ஒதுக்கப்பட வேண்டியது என்று சில சமயம் கருதப்பட்டாலும். குழந்தைகளின் படுக்கைநேரக் கதைகளாக அவை வடிவெடுக்கின்றன. காடுகளும் பாலைவனங்களும் நிறைந்த உலகில் அவையே தனி நபருக்கும் உயிர்த்திருத்தலுக்குமான பாலமாகக் கலையை உருவாக்கித் தருகின்றன. ஐகாரஸ், வாழ்க்கையின் உக்கிரமான படைகளுக்கு முன்பு தோல்வியே காணாத பேட்மனும் அவனது சகாக்களுமாக அவதாரம் எடுத்து விடுவது போல அது வானிலிருந்து முழு வேகத்துடன் பறந்து பூமியை நோக்கி வெளி வருகிறது. இந்தப் புராணக் கட்டுக்கதைகள் தங்கள் வாழ்க்கையைப் பாதிக்கும் பயங்கர சூழ்நிலைகளை மறந்து தப்பிக்கக் குறுக்கு வழியில் விடைகளைத் தருமா என்று மனிதர்கள் வியர்க்கிறார்கள்.

(கிரகங்களை அழிக்கும் வல்லமை பெற்று விட்டவர்களாகக் கருதும் மனிதர்கள் தங்களைக் கடவுள்களாகப் பாவித்துத் தம் வாழ்க்கை முடிவற்றது என்று நினைத்துக்கொள்வது காமிக் புத்தகங்களுக்கும் திரைப்பட கட்டுக்கதைகளுக்கும் சவால் விடும் தமாஷாக இருக்கிறது). வாக்யேகக்காரர்களிடமிருந்து வேறுபடும் இன்றைய எழுத்தாளன் தொன்மம் தன் பழந் தோற்றத்தில் இளைப்பாறுவது போல உயிர்த்து இருத்தலைப் புரிந்துகொள்ள முயற்சிக்கிறான்.

படைப்பாளிகள் எவ்விதம் தங்கள் செயல்பாடுகளை அணுகுகிறார்கள்? எவ்வாறு சோதனைகள் புரிய முயலுகிறார்கள் என்னும் கேள்விகளை இலக்கிய ஆசான்கள் பரிசீலிக்கிறார்கள். உணர்க் கூடிய மெய்ம்மை அல்லது உணர முடியாத மெய்ம்மையுடன் எழுத்தாளனின் தொடர்பு பற்றிய வியாக்கியானத்தைத்தான் ஆய்வுகள் கண்டறிய முயலுகின்றன. அவற்றின் இறுதி முடிவுகள் அடையாள அட்டையில் காணப்படும் குறிப்புகளைப் போல வடிவெடுத்து இலக்கிய வரலாற்று எழுத்தாண்மையின் பதிவுகளாக இடம்பெறுகின்றன. மெய்ம்மை பல நுட்பமான கூறுகளையும் நிலைமைகளையும் பார்த்தோ பாராமலோ வெளிப்படுத்தப்பட்டோ வெளிப்படுத்தப்படாமலோ ஒருவனின் சித்தம் இளைப்பாறும் இடத்தை அடைகிறது. பழம் சாக்கை ஒத்த மனோதத்துவ அலசலோ நவீனத்துவமோ பின்நவீனத்துவமோ அமைப்பியலோ பிந்தைய கட்டமைப்பு வாதமோ எதுவாக இருந்தாலும் அவை அனைத்தும் இறுதியில் கண்டடைவது ஒரே ஒரு எல்லையைத்தான்; ஒட்டு மொத்தமான ஒரு நிலைத்த தன்மை.

படைப்பாளி சீராகவும் நிலைத்த உறுதிப்பாட்டுடனும் தன் எழுத்து செல்லும் விதியை நிர்ணயிக்கின்றானா, அவ்வாறு இயங்குவதன் மூலம் வாழ்க்கைக்குள் பொதிந்திருக்கும் உயிர்ப்புத் தன்மையை நாடி பிடித்து அவனால் பார்க்க முடிகின்றதா? உயிர்த்திருத்தலின் வலிமையை எழுத்தாளன் தனது வழிமுறைகளின் மீது கண்டடைய முயலுகிறான். ஆனால், வாழ்க்கையே குருட்டாம்போக்கு நிறைந்து வழிகின்ற ஒன்று. சூழலும் பிரக்ஞையின் பல்வேறு கூறுகளும் அவனை இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக இழுக்கின்றன. தூய உயிர்த்திருத்தல் என்று தனியே எதுவும் இல்லை. தூய எழுத்து என்று ஒன்று கிடையாது என்பது போல. அனைத்தும் குருட்டாம்போக்கில் வந்து சேர்வது போலக் காணக் கிடைப்பதுதான் உண்மை. விமர்சன அலசல்களால் அவற்றைத் தீர்மானிக்க முடிவதில்லை அவை எவ்வளவு சுவாரஸ்யமாக இருந்தாலும். பிரித்துப் பதம் பார்த்து மறுகட்டமைப்பு செய்வது என்பதே மறுத்துரைப்பதுதான். ஏனெனில், மறுகட்டமைப்பு என்பது உடைந்துவிட்ட பாகங்களை ஒன்றையொன்று சேர்த்து வைக்கும் முயற்சியே. ரோலண்ட் பார்த்ஸ், பால்சாக்கின் 'ஸர்ராஸீன்' என்னும் கதையைக் கட்டமைத்தது போல. ஆனால், அதை அவர் கவர்ந்திருக்கும் விதத்தில் செய்திருக்கிறார். ஒரு விதத்தில் இலக்கிய ஆசான்கள் கதை சொல்லிகளும் கூட.

உயிர்த்திருத்தலை அறிந்து அடையக் கலை மூலமாக மட்டுமின்றி வேறு சாத்தியம் ஏதுமில்லையா? படைப்பாளிகள் தமது படைப்பைக் கூர்ந்து ஆராய்வதில்லை. நடுவே நதி ஓட இருபுறங்களிலும் செங்குத்தாக நிற்கும் மலைகளுக்கு இடையே பள்ளத்தாக்கு இருக்க, கயிறு கட்டி நடக்கும் போது ஒருவர் உணரும் ஜாக்கிரதையை, கவனத்தை ஒருவர் தன் படைப்பை அணுகும் போது பின்பற்ற வேண்டும். அதற்காக அவர் தனது படைப்பு படிப்பவரைப் பிரமிப்பில் ஆழ்த்த வேண்டும் என்று எண்ண வேண்டியதில்லை. தன் எழுத்து ஏதோ குருட்டாம் போக்கில் தோன்றியதல்ல என்பதை நிரூபிக்கும் வண்ணம் அவரது சொற்கள் மனதின் உள் ஆழத்தில் புதைந்திருக்கும் ஒளியை வெளிக்கொணர வேண்டும். ஈட்ஸ் எழுதிய கவிதை ஒன்றில் தனிமையுடன் கூடிப் பெறும் இன்பத்தை அடைய விரும்பியவன் வான் மேகங்களுக்குள் வளைய வருவதை அனுபவிக்க ஆவல்கொள்கிறான். இ.எம்..ஃபாரிஸ்டர் உடலும் மூளையும், அதாவது சிந்தனையும் உணர்ச்சிகளும் இணையும் இடம் பற்றி எழுதுகிறார். ஜேம்ஸ் ஜாய்சின் கதாநாயகன் ஒரு எழுத்தாளனுக்கு மௌனம், புகலிட வாழ்வு, கபடம் என்னும் மூன்றையும், அவனைப்



பொருட்படுத்தாத சமூகத்தை எதிர்கொள்கையில், நினைவில் இருக்க வேண்டும் என்கிறார். காப்ரியல் கார்சியா மார்க்வெஸ் உயிர்த்திருத்தலைக் குழப்பமூட்டும் பாதையாகக் காண்கிறார். சிமான் பொலிவர் அடிமையின் மீது மரணம் தன் சக்தியைக் காட்ட முடியாமல் திணறுகிறது என்கிறார்.

இவையெல்லாம் உயிர்த்து இருத்தலைப் பல்வேறு ஆளுமைகள் கண்டு வர்ணித்திருப்பதைச் சுட்டிக் காட்டுகின்றன. சாதாரண எழுத்தாளன் ஒரு டார்ச் லைட் தரும் ஒளியில் திருப்தியடைகிறான். ஒரு ஜீனியஸ்ஸான படைப்பு ஆளுமை, கொழுந்து விட்டு எரியும் தீப்பந்தத்தை உயர்த்திப் பிடிக்கிறான். அவனது எழுத்தில் மனித உயிரின் ஆதார சக்தி வெளிப்படுகிறது.

ஆண்டனி பர்ஜஸ் ஒருமுறை, "இலக்கியம் என்பது உலகை ஆய்வுலாவாகக் காண உதவுகிறது" என்றார். என்னைக் கேட்டால் எழுத்து என்பது இங்கிருந்துதான் ஆரம்பிக்கிறது. எல்லையற்ற தரிசனத்தை உணர அழகியல்தான் முன் வந்து நிற்கிறது.

வார்த்தை என்பது அளிக்கப்பட பின் எவ்வாறு ஒருவர் எழுத்தாளராகிறார்? என் முயற்சிகள் அவ்வளவு சுவாரஸ்யமானவையா என்று எனக்குத் தெரியவில்லை. மற்றவர்களுடையது மாதிரிதான் என்னுடையதும் இருக்கக் கூடும். இவற்றைப் பற்றி நாம் ஒவ்வொரு முறையும் கூடும் வருஷாந்திரக் கூட்டத்தில் கேட்டவாறு இருக்கிறோம். என்னைப் பொறுத்தவரை என் பேச்சிலும் எழுத்திலும் காணப்படும் உண்மையையே என் படைப்பும் பெற்றிருக்கிறது.

வாழ்வோ அபிப்பிராயங்களோ மட்டுமல்ல படைப்பு என்பது. ஏனெனில், அவற்றில் தனித்து நிற்பதும் சேர்ந்திருப்பதுமான ஒருவிதப் பதற்ற உணர்வைக் கற்பனை உண்டாக்குகிறது. என்னைப் பற்றிச் சுருக்கமாகக் கூறுகிறேன். நான் ஒரு இயல்பான படைப்பாளி என்று நம்புகிறேன். முன் தீர்மானமாக எதையும் கொள்வதில்லை. ஆரம்பத்தில் படித்த படிப்பு எனக்கு சம்பாத்தியத்தைக் கொடுக்கும் என்று நினைக்கவில்லை. என் உணர்ச்சிகளை சந்தோஷத்துடன் என் எழுத்தில் வடித்தேன். பின் நாள்களில் ஆச்சரியப்படுத்திய, கோபமூட்டிய உணர்ச்சிகளின் கலவை வார்த்தை சித்திரம், உள்ளொளியையும் அமைதியையும் பரிபூரணத்தையும் என் எழுத்தில் கொண்டு வந்து சேர்த்தது.

காஃப்காவின் உருவகக் கதையொன்று இம்மாதிரிப் போகும்: "என்னிடம் மூன்று நாய்கள். அவற்றின் பெயர்கள் - 'பிடி அவனை', 'கைப்பற்று அவனை', 'இனிமேல் கிடையாது'. 'பிடி அவனை', 'கைப்பற்று அவனை' என்னும் இரு நாய்களும் பெல்ஜிய கறுப்பு நிற நாய்கள். அவற்றைப் பற்றி யாரும் அறிந்ததில்லை, அவை தனியாக இருப்பவை. ஆனால், 'இனிமேல் கிடையாது' ஒரு வித்தியாசமான நாய். அலையும்

தன்மை கொண்டது. ஒரு ஜிப்ஸி!”

தென்னாப்பிரிக்காவில் நான் வளர்ந்த சிறிய ஊரில் நான் ஒரு ‘இனிமேல் கிடையாது’வாக வளர்ந்தேன். ஊர்க்காரர்கள் ஏற்றுக்கொள்ளும் சம்பிரதாயங்கள் என்னிடம் படிந்திருக்கவில்லை. ஏற்கனவே உபயோகப்படுத்தப்பட்ட, நான் கற்றறிந்த வார்த்தைகளை டிங்கரிங் செய்து எழுத முயன்று கொண்டிருந்த ஜிப்ஸியாக இருந்தேன். என் பள்ளிக்கூடம்தான் உள்ளூர் நூலகம். பிரௌஸ்ட், செக்காவ், தஸ்தோவ்ஸ்கி ஆகியோர்தான் என்னைப் படைப்பாளியாக உருவாக்கிய பேராசிரியர்கள். புத்தகங்கள் மற்ற புத்தகங்களை உருவாக்குகின்றன என்னும் தியரிக்கு நான் உதாரணமாக விளங்கினேன். ஆனால்,இது வெகுகாலம் வரை நீடித்திருக்கவில்லை. இது எந்த சீரியஸ் இலக்கிய எழுத்தாளனுக்கும் பொருந்தும்.

யௌவனப் பருவத்தில் நுழையும் போது பாலுணர்வு காரணமாக ஒருவிதத் தனித்த உணர்வு ஒருவருக்கு ஏற்பட்டு விடுகிறது.. பெரும்பாலான குழந்தைகளுக்கு அப்போதிருந்து எழுத்தின் மீதான ஆர்வம், நாடகத்தின் மீதான ஈர்ப்பு ஆகியவை குறைந்து கற்பனையில் காதலும் எதிர்பார்ப்பும் பகல் கனவுகளாக வந்து தீண்டுகின்றன. ஆனால், கலைஞனாக விரும்புபவருக்கு இந்த இளம் பருவ மாறுதல் வேறொன்றைத் தருகிறது: கற்பனைகள் வெவ்வேறாகத் தலை நிமிர்ந்து,எழுந்து பல்வேறுபட்ட உணர்ச்சிகளைத் தீண்ட ஆரம்பிக்கின்றன. படைப்பாளி மற்றவரின் வாழ்வில் நுழைந்து பார்க்க முயலுகிறான். ஒதுங்கி நின்றும் ஒட்டி நின்றும் காணும் திறமையைப் பெறுகிறான்.

எதைப் பற்றி எழுதுவது என்று நான் எழுத ஆரம்பித்த போது யோசித்தேன். என் முதல் கதையில் ஒரு புறாவை ஒரு பூனை கொன்று விடுகிறது. கதையின் முடிவுக்குச் சாவுதான் சரியானது என்று ஒரு சிறுமியாக அக்கதையை எழுதியதையா, அல்லது நான் பள்ளிக்கு நடந்து செல்லும் வழியில் எங்கள் ஊரில் உள்ள தங்கச் சுரங்கத்தில் வேலை பார்த்த கறுப்பு இன மக்கள் மீது வெள்ளை இனத்தவர் செலுத்திய அதிகாரத்தையும் அடக்கு முறையையும் அவமானத்தையும் பற்றி எழுதுவதா என்று யோசித்தேன். பல வருஷங்களுக்குப் பின் நான் உணர்ந்தேன் - நான் ஒரு கறுப்பினச் சிறுமியாக இருந்திருந்தால், படைப்பாளியாக ஆகியிருக்கவே முடியாது. ஏனென்றால் எங்கள் பள்ளி நூலகத்துக்குள் வரக் கறுப்பினக் குழந்தைகளுக்கு அனுமதி இல்லாதிருந்தது.

ஒரு படைப்பாளி மற்றவர்கள் மீது கவனம் செலுத்திப் பார்ப்பது அடுத்த கட்டமாகி விடுகிறது. நான் எழுதியதைப் படிப்பவருக்கு, என் படைப்பைப் பிரசுரத்துக்கு அனுப்புகிறேன். நான் எழுதிய படைப்பைப் பிரசுரத்துக்காக அனுப்பும் போது பிரசுரம் பற்றிய என் எண்ணம் இதுவாகத்தான் இருந்தது: படைப்பாளி என்பவன் குறிப்பிட்ட வாசகர்களை முன் வைத்து எழுதுபவன் என்பதைப் பலர் நம்புவதில்லை. இதை நான் அறிந்திருந்தாலும் என்னைப் பொறுத்தவரை பிரசுரம் என்பது மேற்குறிப்பிட்ட மாதிரிதான். நான் கவனித்த மற்றொரு விஷயம் ,உணர்ந்தோ உணராமலோ எழுத்தாளன் சபலத்துடன் நடமாடுவது என்பது - யார் என் எழுத்தினால் பாதிக்கப்படுகிறார்கள் அல்லது யார் என் எழுத்தை ரசிக்கிறார்கள் - என்னும் எட்டிப் பார்க்கும் முறை அந்தப் படைப்பாளியின் திறமையை ஒழித்துக் கட்டி விடும்.

இதனுடைய மாற்று அம்சம் - தந்தக் கோபுரத்தில் உட்கார்ந்துகொண்டு எதையும் அலட்சியமாகப் பார்த்துப் பழித்துக் கொண்டிருப்பது. இது படைப்பாளியின் படைப்புத் திறனை அழிக்க வல்லது. தன் நண்பர்களுக்காகவும் பொழுதைக் கழிப்பதற்காகவும்தான் தான் எழுதுவதாக போர்ஹே ஒருமுறை சொன்னார். ‘நீங்கள் யாருக்காக எழுதுகிறீர்கள்?’ என்னும் எரிச்சலூட்டும் கேள்விக்கான பதிலாக இதை அவர் கூறியிருக்கலாம். சார்த்தர், ஒரு எழுத்தாளன் எப்போது எழுதுவத்தை நிறுத்த வேண்டும் என்றும் அதன் பின் வேறெந்த விஷயங்களில் அவன் கவனம் செலுத்த வேண்டும் என்றும் கூறினார். இதற்குக் காரணமும் அவருக்குத் தன் எழுத்தின் மீது இருந்த ஈடுபாட்டினாலும் உலகம் அநீதியைக் கண்டும் காணாதது போல நடந்துகொள்வது ஏற்படுத்திய கோபத்தினாலும் கூறிய ஒன்று என்று நான் நினைக்கிறேன். சார்த்தரும் போர்ஹேயும் எழுத்துக்கு சமூகப் பொறுப்பு உள்ளதா என்னும் கோட்பாட்டில் முற்றிலும் வேறு வேறு திசைகளில் நின்றவர்கள். ஆனால், மெய்ம்மைக்கு ஒரு தவிர்க்க முடியாத சமூகப் பங்களிப்பு உள்ளது; இதிலிருந்துதான் நண்பர்களுக்கானது; பொதுமக்களுக்கானது என்ற வகைகள் உருவாகி நிற்கின்றன என்பதைத் தெளிவாக அறிந்திருந்தார்கள்.. போர்ஹே அவரது நண்பர்களுக்காக மட்டும் எழுதவில்லை என்பது அவரது படைப்புக் கொடை உலகெங்கும் சென்றதிலிருந்து நான் அறிவோம். சார்த்தர் எழுதுவதை நிறுத்தவில்லை. 1968இல் நடந்த போராட்டத்தில் பங்கு பெற்றார் என்றாலும்.

நாம் யாருக்காக எழுதுகிறோம் என்னும் துன்புறுத்தும் கேள்வி ஒவ்வொரு படைப்பாளியிடமும் எழுகிறது. வாலில் கட்டப்பட்ட தகரக் குவளையைப் போல ஒவ்வொரு பிரசுரத்தின் போதும் அது எழுப்பும் ஒலியில் கேட்பது பாராட்டுரையா அல்லது வசவா என்று தெரிந்துகொள்ளும் ஆர்வம் எழுத்தாளனிடம் இயல்பாக இருக்கிறது. இந்த விவகாரத்தில் காமூ எதிர்கொண்ட விதம் சிறப்பானது. “தனி மனிதர்கள் கட்சி கட்டிக்கொண்டு ஆடுவது,இலக்கியங்கள் கட்சி கட்டிக்கொண்டு ஆடுவதை விட சுவாரஸ்யமானது!” ஒன்று மனிதனின் விருப்பத்தைப் பூர்த்தி செய்கிறது.



மற்றொன்று பூர்த்தி எதுவும் செய்வதில்லை. ஒருவனுக்கு உணவும் நீதியும் வேண்டுமென்றால் அவன் என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்திட வேண்டும். அவன் மனது விரும்பும் பரிபூரண அழகை இதுதான் சாதித்துத் தரும். ஆகவே காமூ ஒரு படைப்பாளியிடம் தைரியமும் திறமையும் இருக்க வேண்டும் என்றார். மார்க்வெஸ் இலக்கியத்தைப் பற்றி பேசும் போது, "ஒரு எழுத்தாளன் புரட்சியைப் பற்றி எழுதி சாதிக்க வேண்டுமென்றால் அவன் எவ்வளவு மிகச் சிறந்த முறையில் அதை எழுதுகிறான் என்பதைப் பொறுத்தது" என்றார்.

இந்த இரண்டு அபிப்பிராயங்களும்தான் ஒரு எழுத்தாளனாக நாம் ஏற்க வேண்டிய கோட்பாடு என்று நான் நம்புகிறேன். சமகால எழுத்தாளர்களை இன்றும் என்றும் சந்திக்கும் சவால்களுக்கு இது பதில் அளிக்காது. ஆனால், இக் கோட்பாடு ஒரு ஆண் அல்லது பெண் படைப்பாளியின் முகத்தைத் தெளிவாகக் காட்டும் நேர்மையுடன் செய்யப்படும். சமூக அமைப்பில் அந்தப் படைப்பாளி ஒரு பொறுப்புள்ள மனிதராக நடந்துகொள்ள வேண்டிய அவசியத்தை அது தெரியப்படுத்தும்.

உயிர்த்து இருத்தல் ஒரு குறிப்பிட்ட நேரத்தில், ஒரு குறிப்பிட்ட இடத்தில் தன்னை முன் வைக்கிறது. இலக்கியத்தில் இருத்தலியலின் பாதிப்பும் அதன் விளைவும் முக்கியமானவை. ஸ்லா மிலோஸ், "தேசத்தையோ, மக்களையோ பாதிக்காத கவிதை எதற்கு?" என்று கேட்டார். "மரங்களை பற்றிப் பேசுவது பெருங் குற்றத்துக்கு ஈடானது" என்று கருதப்பட்ட ஒரு சந்தர்ப்பத்தை அவர் சுட்டிக் காட்டினார். நாம் எழுதும் போதும், வாசிக்கும் போதும் இத்தகைய விரக்தி நிறைந்த தருணங்களை எதிர்கொண்டிருக்கிறோம். படைப்புகள் தணிக்கை செய்யப்பட்டும் தடை செய்யப்பட்டுமாய் இவ்வுலகில் நிகழ்ந்த காலங்களில் சார்த்தர் கூறியது பிரச்சினையைத் தீர்த்து விடவில்லை. இத்தகைய கொடுஞ் சூழலில் படைப்புகள் சிறு தாள்களில் சிறைக் கதவுகளைத் தாண்டிக் கடத்தல் செய்யப்பட்டன. உயிர்த்து இருத்தல், முழுமை பெறும் உயிரியின் அனுபவங்களை நாம் ஆராய்ந்து உணர வழி வகுத்தது.

நம்மில் சிலரின் புத்தகங்கள் பல வருஷங்களுக்கு யாராலும் தீண்டப்படாமல் நம் சொந்த நாட்டிலேயே படிக்கப்படாமல் இருந்தன. சில சமயம் தடை செய்யப்பட்டும் கூட. இருந்தும் நாம் எழுதிக்கொண்டுதான் இருந்தோம். பல படைப்பாளிகள் சிறையில் அடைக்கப்பட்டனர். ஆப்பிரிக்காவைப் பொறுத்தவரை சோயிங்கா, தூக்கி வா தியங்ளே, ஜாக் மாபன்ஜெ - அவரவர் நாடுகளில்

-போகஎனதுநாடானதென்னாப்பிரிக்காவில்ஜெரிமி கிரானின், மங்கானே வாலி செரோட், பிரேட்டேன் பிரேட்டேன்பாக், டெனிஸ் பேரோட்டஸ், ஜாக்கி எஸராகே போன்றோர் அவர்களது வாழ்க்கையில் தைரியத்தைக் காண்பித்ததற்காகச் சிறையில் அடைக்கப்பட்டார்கள். கவிகளாக 'மரங்களை பேசும்' தங்கள் உரிமையை விட்டுத் தர மறுத்தார்கள். தாமஸ் மான் முதல் சினுவா ஆசேபே வரையிலான தலைசிறந்த எழுத்தாளர்கள் அரசுகளுடன் ஒத்துப் போகாத காரணத்தால் அயல் நாடுகளில் புகலிடம் பெற்றார்கள். இவர்களில் சிலர் அந்த அதிர்ச்சியிலிருந்து மீளவில்லை. மற்றும் சிலர் இறந்துவிட்டார்கள். கான் தெம்மா, அலெக்ஸ் லா குமா, நட் நகாசா, டாட் மஸ்துகிஷா ஆகிய தென்னாப்பிரிக்க இலக்கிய ஆளுமைகள் பற்றி நான் நினைத்துப் பார்க்கிறேன். இன்னும் சிலர், அரை நூற்றாண்டுக்கு முன்பு ஜோசப் ராத் முதல் மிலன் குந்தேரா வரை தங்கள் தாய்மொழியை விடுத்து அயல் மொழியில் பிரசுரம் பெறும் கட்டாயத்துக்கு உட்படுத்தப்பட்டார்கள்.

1988இல் இதற்கு முன் கண்டிராத வகையில் எழுத்தாளனின் ஆற்றல் மீது நடுங்க வைக்கும் நிலைமைஏற்படுத்தப்பட்டது:அவனதுபடைப்புகளின் மீதான தணிக்கை. வெளியுலகில் மிகச் சிறந்த எழுத்தாளர்களாக அறியப்பட்டிருந்தவர்கள் மிக மானக் கேடான முறையில் நடத்தப்பட்டார்கள். எழுதுவதற்குத் தடை செய்யப்பட்டார்கள். நாடு கடத்தப்பட்டார்கள்; அரசியலுக்கு அப்பாலான விஷயங்களுக்காக. ஃபிளாபர்ட், 'மேடம் பொவாரி' நாவலை அசிங்கமாக எழுதினார் என்று நீதிமன்றத்துக்கு இழுத்து வரப்பட்டார். 'மேரீட்' என்னும்புத்தகம்நிந்தனையைவிதந்தோதுகிறதுஎன்று ஸ்ட்ரெய்ன்பர்க்குற்றம்சாட்டப்பட்டார். லாரன்ஸின் 'லேடி சாட்டர்லிஸ் லவர்' தடை செய்யப்பட்டது. இம்மாதிரிப்பலவிதமானபொய்க்குற்றச்சாட்டுகளைப் பூர்ஷ்வா அரசாங்கங்களும் அவற்றின் அதிகாரிகளும் போட்டுப் படைப்பாளிகளைத் துன்புறுத்தினர். சர்வாதிகாரத்துக்கு எதிராக துரோகமிழைத்தாக குற்றம் சாற்றப்படுவது போல பிரான்ஸ், சுவீடன், இங்கிலாந்துபோன்றநாடுகள்பேச்சுச்சுதந்திரத்துக்குத் தடை விதிப்பதில் குறியாயிருந்தார்கள். இம்மாதிரிச் செயல்களை இந்த நாடுகளிலிருந்து யாரும் எதிர்பார்த்திருக்கவில்லை. ஆனால், அதே சமயம் இத்தகைய அடக்குமுறைகளை எதிர்த்து அதிகாரத்தைச் சவாலுக்கு இழுத்த மனித சக்தியின் எழுச்சியை அரசாங்கங்கள் எதிர்பார்க்கவில்லை. உலகின் மிகப் பிரபலமான மதம் ஒன்று ஒரு படைப்பாளிக்கு மரண தண்டனை விதித்தது.

மூன்று வருடங்களுக்கு மேலாக சல்மான் ருஷ்டி எங்கு சென்றாலும் எங்கு வாழ்ந்தாலும் அவரைக் கொல்வதற்கு முஸ்லீம் அதிகாரம் ஆணையிட்டது. அவருக்குப் புகலிடம் தர யாருமில்லை. ஒவ்வொரு காலையிலும் அவர் எழுத உட்காரும் போது அன்று அவர் உயிருடன் இருப்பாரா என்று அவர் அறியார். அவர் அன்று எழுதும் பக்கம் முழுவதும் நிரம்புமா என்றும் அவருக்குத் தெரியாது. அவர் ஒரு சிறந்த படைப்பாளி. அவருக்குத் தண்டனையை வாங்கித் தந்த 'ஸாடானிக் வெர்சஸ்' என்னும் படைப்பு இன்றைய உலகில் உயிர்த்து இருத்தலைப் பற்றிப் பேசும் மிகச் சிறந்த எழுத்து. இரு கலாச்சாரங்களுக்கு நடுவே பின்-காலனிய நாள்களில் பிரயாணிக்கும் ஓர் ஆளுமையைப் பற்றியது. நேராகச் செல்லாத கற்பனை, பாலுணர்வாலும் தாய்மையாலும் ஏற்படும் காதலும் பாசமும் சமூக ஒப்புதலுக்காக சடங்குகள், திட்டமிட்ட இறுகிய மத நம்பிக்கை, அதனைக் கட்டாயத்தினால் ஏற்றுக்கொள்ள மறுக்கும் மற்ற நம்பிக்கைகள், சமயம் சார்ந்ததும் சாராததுமான வித்தியாச வாழ்க்கை முறை ஆகிய இவற்றை அவரது படைப்பு அலசுகிறது. அவரது நாவல் உண்மையான ஓர் புராதன இலக்கியம். குந்தர் கிராஸ் நாஸிசத்தின் பிற்காலம் பற்றி 'டின் டிரம்'மிலும் 'டாக் இயர்ஸி'லும் எழுதியதை சல்மான் ருஷ்டி பின் காலனிய வாழ்க்கையை மேலை நாடுகளின் முன் வைத்தார். 'வெயிட்டிங் ஃபார் கோடாட்'டில் பெக்கெட் இருத்தலியலின் நோய்மையைச் சுட்டிக் காட்டியதை ருஷ்டி தன அணுகலின் மூலம் தெரிவித்தார். இப்படைப்புகளுக்குள் எழும் தராதரம் பற்றிய கேள்வி தேவைப்படாதது. அப்படியே ருஷ்டி ஒரு சாதாரண, சாமானிய எழுத்தாளர் என்று வைத்துக்கொண்டாலும் அவரது நிலைமை ஒவ்வொரு சக எழுத்தாளரின் அக்கறையைத் தூண்ட வல்லதாய் இருந்தது. அவருடைய சுய வாழ்க்கைக்கு நேர்ந்த அலைக்கழிப்புகளுக்கு அப்பால், வார்த்தையை நம்பி வாழும் ஒருவனின் மீது செலுத்தப்பட்ட அதிகாரமும் வன்முறையும் நமக்கு முன் வைப்பது என்ன? ஒவ்வொரு தனி மனிதனும் அவர்களுக்கு மேல் உள்ள அரசாங்கங்களும் மனித உரிமைக் கழகங்களும் பதற்றம்கொள்ள வேண்டிய விஷயம். சர்வாதிகாரம் ஒழிக்கப்பட்டுவிட்ட பின்னும் மதத்தின் பெயரால் பயங்கர வன்முறையைக் கட்டவிழ்த்து கலைஞர்களின் மனிதாபிமானத்தின் மீது செலுத்தப்படும் அடக்குமுறையை, வெறியை மற்ற ஜனநாயக அரசுகளும் ஐக்கிய நாடுகள் சபையும் தடுத்து நிறுத்த வேண்டும்.

இந்த நூற்றாண்டின் எழுத்தாளர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளைப் பேசுகையில் அடக்கு முறையைக் கையாண்டு இயங்கிய அரசுகளை - அவை ரஷ்யாவோ லத்தீன் அமெரிக்காவோ சீனாவோ ஆப்பிரிக்காவோ - எதிர்த்து எழுந்த படைப்பாளிகள் தனிமனித சுதந்திரத்துக்குப் பங்கம் விளைவிக்கும் செயல்களுக்குத் தங்கள் எதிர்ப்புக் குரலைத் தெரிவித்தார்கள். ஆனால், அரசுகளோ இவற்றை ஒப்புக்கொள்ளாது மேலும் மேலும் அடக்குமுறையை ஏவின. கலையுணர்ச்சியுடன் நாம் எடுத்த துணிச்சலான முயற்சியை, அரசுகளின்



கேவலமான நடத்தைகள் மற்றும் ரகசியங்களைத் தோலுரித்துக் காட்டியதை அரசுக்கு எதிரான செயல் என்று எதிர்த்தார்கள். சமூகம் வெளிப்படுத்தும் சிதைவுகளை, திசை திருப்பும் முயற்சிகளை, கோணல்களைக் கவனிக்கும் படைப்பாளிக்கு

அவற்றைத் தன் கதையின் கருப்பொருளாகவும் பாத்திரங்களாகவும் உருவாக்குவதைத் தவிர வேறு வழியில்லை. கடலின் பலம் மீனவனின் வாழ்க்கையைத் தீர்மானிப்பது போல.

இங்கு ஒரு முரண்பாடு உள்ளது. ஒரு பக்கம் படைப்பாளியைத் துரோகமிழைத்தவன் என்கிறது அரசாங்கம். மற்றொரு பக்கம் அவன் கண்மூடித்தனமான ஆதரவு தெரிவிக்கவில்லை என்று போராட்டவாதிகள் கோபப்படுகிறார்கள். ஒரு சீரிய படைப்பாளி வெறும் 'நடுநிலைவாதி'யாகத் தன்னைக் காண்பித்துக்கொள்ள விரும்புவதில்லை. போராட்டம், தராசின் சீரைக் கேள்விக்குரியதாக மாற்றிவிடும் வல்லமை வாய்ந்தது. ஒரு எழுத்தாளனாகவும் நீதிக்குப் போராடுபவனாகவும் இருக்க வேண்டுமென்றால் மார்க்வெஸ் சொன்னது போல எதையும் உள்புகுந்து பார்க்கும் வல்லமையை அவன் பெற்றிருக்க வேண்டும். எதிரியையும் உற்ற தோழனையும் பரிசீலித்துப் பார்ப்பதில் அவன் தயங்க வேண்டியதில்லை. சத்தியத்தைத் தேடும் முயற்சிதான் உயிர்த்து இருத்தலுக்கு வழி கோலும். ஈட்ஸின் மிருகத்தைப் போலப் பிரசவத்துக்கு முன்பு தோள்களையும் தலையையும் குனிந்தபடி வைத்திருக்க வேண்டும். இலக்கியத்தில், வாழ்விலிருந்து நாம் ஒருவரையொருவர் முகத்தை அலசுகிறோம்; நாம் பார்க்கும் கண்ணைப் படிக்கிறோம். இதைச் செய்யப் பலகாலம் பிடிக்கிறது.

தென்னாப்பிரிக்கக் கவியும், நீதிக்கும் அமைதிக்கும் போராடியவருமான கவி செரோட்டின் வரிகள் இவை....

மனித சமூகத்துக்குப் பணிபுரியும் ஓர் படைப்பாளி அவன் / அவள் கொள்ளும் தனிப்பட்ட நம்பிக்கைகளின் மீதான விசுவாசத்தை ஒட்டி உறவாட மறுக்கிறான். உயிர்த்து இருத்தலே அவனுக்குப் பிரதானமாக இருக்கிறது. உண்மையின் சிக்கலான பகுதிகளை ஊடுருவிச் செல்லும் அவன் அவற்றின் சிதறல்களை ஒன்று சேர்க்கிறான். உயிர்த்து இருத்தல் அவனுக்குச் சத்தியத்தின் பல கூறுகளைத் தெரியப்படுத்துகின்றது. மற்றவர்களின் வியாசங்கள் அவனை மருட்டுவதில்லை. அவன் பொய்களை முன் வைத்து அபிப்பிராயங்களை மாற்றிக்கொள்வதில்லை. வார்த்தைப் பூச்சுக்கள், நிறவெறியைப் பூசி மெழுகி சொற்களை அசிங்கமாக உபயோகிக்கும் போக்கு, ஆணாதிக்கம் முன்முடிவு, அழிவைப் போற்றுதல், தனி மனித உரிமை மீது ஆதிக்கம் செலுத்துதல், சாபங்கள், புகழ்ச்சி மாலைகள் ஆகியவற்றைப் புறக்கணித்து மேலே செல்கிறான். ●

"ஸிந்துஜா" <weenvy@gmail.com>

கடந்த ஐம்பது ஆண்டுகளில் தமிழ்க் கவிதையில் பெண் கவிஞர்களின் பாடுபொருளும் பங்களிப்பும் குறித்த ஓர் அலசல்..

# பெண்களின் பலம்!

## க்ருஷாங்கினி

தமிழில் நவீன கவிதை என்பது பாரதியில் இருந்து தொடங்குகிறது. தொடர்ந்து 'எழுத்து', 'மணிக்கொடி' 'சிவாஜி' போன்ற பத்திரிகைகளில் பிச்சமூர்த்தி போன்றோருடைய புதுக்கவிதைகள் அச்சேறுகின்றன. அதைத் தொடர்ந்து 'கசடதபற', 'வானம்பாடி', 'படிகள்', 'தெறிகள்', 'கணையாழி', 'கொல்லிப்பாவை' என பல சிற்றிதழ்கள் கவிதைகளை வெளியிடத் தொடங்கின. ந. பிச்சமூர்த்தி புதுக்கவிதைகளின் தந்தை என்றும் அழைக்கப்படுகிறார். ஞானக்கூத்தன், வைதீஸ்வரன், பிரமிள், நகுலன், பசுவையா, சி. மணி, ஆத்மாநாம், சுகுமாரன், பாதசாரி, பிரம்மராஜன் என ந. பிச்சமூர்த்தியின் வரிசை தொடர்கிறது. வானம்பாடியின் வரிசையும் புவியரசு, சிற்பி, அப்துல் ரஹ்மான், அக்னிப் புத்திரன், மு. மேத்தா என்று தொடர்கிறது.

இந்த கூட்டத்தில் ஆரம்பகால பெண் கவிஞர்கள் என எழுத்தில் சி.சு. செல்லப்பாவின் ஊக்குவிப்பால் எழுதிய இரா. மீனாட்சி தொடங்கி திரிசடை, ஜெயராதா, எம்.ஏ. சுசீலா, கி. விஜயலட்சுமி, தேவமகள், ரோஹிணி, இவரா என்று நவீனக் கவிதையில் ஆரம்பகாலம் முதல் பெண்களின் பங்களிப்பு விரல் விட்டு எண்ணும்படியாகத்தான் இருந்து வந்துள்ளது. அதிலும் தொடர்ந்து இயங்குதல் என்பது மிக அரிதாகவே உள்ளது. கலையின் எல்லாப் பிரிவுகளிலும் இந்நிலையைக் காண முடிகிறது. பெண்ணுக்கு கலையையே தன் வாழ்க்கை போக்காக எடுத்துக் கொண்டு அதே அலை வரிசையில் இயங்குதல் என்பது மிகக் குறைவாகவே வாய்க்கிறது. தடைகள் பல உருவத்தில் வருகிறது. அதில் குடும்பம், சமுதாயம் எனவிட்டுக்கொடுத்தல் பெண்ணிடமிருந்து தொடங்கி அதிலேயே தொடர எதிர்பார்க்கபடுகிறது. எனவே, பெண்ணும் கலையின் தொடர்ச்சியை கடைசிபட்சமாகக் கொள்கிறாள். பிறகு அதுஇல்லாமலேயே வாழப் பழகிவிடுகிறாள். கலை ஆவேசம் குறைந்து விடுகிறது. இது எழுத்து உலகிற்கும் பொருந்தும்.



பின்னர் ஆழியாள், ஊர்வசி, சிவரமணி, செல்வி, அவ்வை, சங்கரி, சுமதிரூபன், றஞ்சனி, இளம்பிறை, உமா மஹேஸ்வரி, க்ருஷாங்கினி, ப. கல்பனா, கனிமொழி கருணாநிதி, குட்டி ரேவதி, சல்மா, சுகந்தி சுப்ரமணியம், தாமரை, தேன் மொழிதாஸ், பாரதி கண்ணம்மா, மாலதி மைத்ரி, மாலதி, மித்ரா, வத்சலா, சுகிர்தராணி, அ. வெண்ணிலா, மு. சத்யா, ஜெயராணி, வைகைச் செல்வி, லீனா மணிமேகலை, தமிழச்சி தங்கபாண்டியன், புதியமாதவி, ரங்கநாயகி, தென்றல், ராஜலட்சுமி, மீரா நம்பியார், திலகபாமா, ச. விஜயலட்சுமி, கு. உமாதேவி, எஸ். தேன்மொழி, தமிழினி, சக்தி அருளானந்தம், உமாஷக்தி, சக்திஜோதி, நன்தமிழ்நங்கை, மனுஷி, நிதா எழிலரசி, ஜான்னவி, முபின் சாதிகா, பாலவனலாந்தர், அனார், அரங்கமல்லிகா, கவின்மலர், தி. பரமேஸ்வரி, ச. விஜயலட்சுமி, பாமா சந்திரன், மதுமிதா என பலர் எழுத வந்தார்கள்; தொடர்ந்து எழுதுகிறார்கள்.

மற்ற படைப்புகளைப்போல் அல்லாமல் எழுத்து என்பது கல்வி சார்ந்ததாகவும் அறிவு சார்ந்ததாகவும் அமையப் பெற்றுள்ளது. கல்வி, நீண்ட பாரம்பரியமாக ஆண் சார்ந்ததாகவே இருந்து வந்திருக்கிறது. எனவே, படைப்பு (எழுத்தில்) என்பது அறிவுலகம் சார்ந்தது; அது பெண்களுக்கு அப்பாற்பட்டது என்ற எண்ணமும் பரவலாக இருந்துள்ளது. (2000 ஆண்டுகள் எழுத்துலகப் பாரம்பரியம் நம் பெண் எழுத்துக்கு உண்டு. ஆனாலும், அவர்கள் கரைந்தவர்களாகவே, அரூபமானவகளாகவே இருந்திருக்கின்றனர்.) இதன் அடிப்படையில், பெண்கள் எழுத வரும்பொழுது அது வெறும் பெண் சொற்கள் மட்டுமே என்பதாக புறந்தள்ளல் இருந்தது. அறிவுப் போட்டியில் ஈடுபடும் தகுதி பெண்ணுக்கு இருப்பதாக இன்னமும்



குட்டி ரேவதி



சல்மா



தேன்மொழி தாஸ்



தாமரை

சிலர் எண்ணுவதில்லை. அரசியல், பொருளாதாரம் உலகமயமாக்கல், இசங்கள் சார்ந்ததனைத்தும் ஆண் சார்ந்தவை; பிரசவம், வலி, தீட்டு, வரதட்சணைக் கொடுமை, தனிமை, சோகம் போன்றவை பெண்களுக்காக ஒதுக்கப்பட்டவை. இவைகள் மட்டுமே அவள் எழுத அனுமதிக்கப்பட்டவை என்பதான பார்வை சில ஆண்டுகளுக்கு முன்பு வரைகூட பரவலாக இருந்து வந்தது. என்னைப் பார்த்து, பெண்ணின் வலிகளைப் பற்றி எழுதாமல் என்ன எழுத இங்கு தேவை இருக்கிறது என்று வினவினார்கள். வாழ்வு சிக்கலோ தத்துவப் பார்வையோ உனக்கு எதற்கு என்றனர்.

இந்நிலையில் சென்ற நூற்றாண்டில் பெண்கள் (கல்வி பயின்றவர்கள்) தங்களுக்கான கவிதை தாகத்தை பல விதங்களிலும் தீரத்துக்கொண்டு இருக்கின்றனர். பெண்கள் கூடும் இடங்களான திருமணம்போன்றவைபவங்களில் பாட்டுக்கள் எழுதி, அதைப் பரவலாக்கியுள்ளனர். இதுபோன்றவைபவப் பாட்டுக்கள் பலதும் பெண்களால் இயற்றப்பட்டவை. இன்றும் பாடப்பட்டு வருபவை.

முன் உதாரணமாகப் பெண் கவிஞர்கள் அற்ற நிலையில் நவீன கவிதை எழுத வந்த பெண் தமக்கு முன்னாலிருந்த ஆண் கவிஞர்களின் அல்லது புழக்கத்திலிருந்த வார்த்தை அமைப்புகளைப் பயன்படுத்தி அதன் அடியொற்றி களம் அமைத்துச் செயல்படுகிறாள். புராண இதிகாசங்களிலிருந்து எடுத்துச் சொல்லல், ஏற்கனவே கையாளப்பட்ட முறைகளில் எழுதுதல், நேரடியான செய்தி சொல்லும் கவிதை, படிமக் கூறு கவிதை, உரைநடைக் கவிதை என எல்லாவற்றிலுமே இந்நிலை உள்ளது. தனது சூழலைக் கவிதைகளில் பதிவு செய்யும் முறையும் வாழ்வின் தனது இடம் பற்றிய கேள்வியும் எழும் பொழுது பெண், பெண்ணடிமைத்தனம், ஆணாதிக்கம், தனது இருத்தல் ஆகியவற்றின் மேல் கேள்விகள், தனக்குள் ஏற்படும் பதிலற்ற நிலை, சமூகம் சார்ந்த பார்வை என எல்லாவற்றையும் உரத்து சிந்தித்து சொல்லி பதிவு செய்கிறாள்.

பெண் இவ்வாறு சிந்திக்க, செயல்பட ஆண்களின் எழுத்துக்கள் பரவலாக பெரும் உதவியாயிருந்தது என்பதையும் மறுக்க முடியாது. பாரதி தொடங்கி பெரியார் முதலாக பலர் இதற்கு தடம் செய்து தந்தனர். அது சிறிது சிறிதாக மாற்றம் கொண்டு இன்று பெண் மொழி உருவாகி இருக்கிறது. இன்னமும் செழுமைப்பட வேண்டும்.

பெண் தன் நிலை சொல்ல முற்படும் காலகட்டத்தில் பெண்ணின் சிக்கல்கள், வாழ்க்கை முறை, சமூகம் சார்ந்த பார்வை, அவர்கள் மீதான நிர்பந்தம் ஆகியவை வெளிப்படும்போது அவற்றைப் பதிவு செய்வதுதான் இயல்பாக இருக்கமுடியும்.

எந்த ஜாதியிலும் மதத்திலும் சமூகம் சார்ந்த அழுத்தத்துடன் அந்தந்த இனம் சார்ந்த ஆண்களின் ஆதிக்கத்துடனும் அழுத்தத்துடனும்தான் பெண் வாழ வேண்டியுள்ளது. பெண்ணுக்கு இருக்கும் தடைகள் இன்னமும் இறுக்கமும் பிடிப்பும் கொள்ளும்போது திணறல் அதிகமாகிறது எனலாம். கல்வி, பொருளாதாரம், இருப்பு என எல்லாவற்றிலும் உரிமை மறுக்கப்படும்போதுதான் பெண் குரல் ஓங்குகிறது.

மற்றொரு வகைப் பெண்களின் எழுத்தில் உணர்ச்சிகளின், அவ்வப்போதைய வாழ்க்கைச் சுமையின் இழப்பு போன்றவற்றைப் பதிவு செய்தலை காணமுடிகிறது. பெண்ணுக்கே உரித்தான உணர்வுக் குவியல் கவிதைகளில் வெளிப்படுகிறது. இது, மரணம், பிறப்பு, வாழ்க்கையின் ஓட்டம் சார்ந்தும் பதிவு செய்யப்படுகிறது. ஒடுக்கப்பட்டவர்களின் இடமும் அதை அவர்கள் பெருவதற்கான போராட்டமும் பெண்களின் கவிதைகளில் வெளி வந்துள்ளன.

மேற்குறிப்பிட்ட எல்லா வகைகளும் எழுதப்படாத

வாய்மொழிப் பாடல்களிலும் பதிவாகி உள்ளது குறிப்பிடத்தக்கது.

90களுக்குப் பிறகு பரவலாக அதிக எண்ணிக்கையில் பெண் கவிஞர்கள் அறியப்படுகிறார்கள். இது ஒரு மகிழ்ச்சியான விஷயம்.

வார்த்தைகளில் நட்பை, நட்பின் ஆழத்தை அல்லது விரிசலை அலங்காரமின்றி காட்சிப்படுத்தி விட்டு அதிலிருந்து தான் விலகி கொள்ளும் சே. பிருந்தா; தனிமை, மதம், சுமை என எல்லாவற்றிலும் அழுத்தம் மேற்கொண்டும் பின் சற்றே வெளிவந்தும் இன்னமும் சுமை மாறா சோகத்துடன் எழுதும் சல்மா; படிமங்களாக அனைத்தையும் பார்க்கிறேன் என எழுத ஆரம்பித்து முதல் தொகுதிக்குப் பின் பெண் உடல் மொழி சார்ந்து எழுதும் குட்டி ரேவதி; சலனத்தில் ஓடும் வாழ்வின் அல்லது உயிரின் நிலையைக் கட்டி இழுத்து சலனமற்று நிலைநிறுத்தி அதிலிருந்து மறுசலனம் உருவாக்கும் மாலதி மைத்ரி; கருவறை வாசனையை மறுபடி அடையவும் பெண் சமமற்றுப் போனதைப் பற்றி பல கேள்வி எழுப்பியும் எழுதிவரும் கனிமொழி; இறப்பின் இழப்பின் தொடரில் சிலவற்றை மட்டும் வெளியிட்டு, மரணத்தை, வாழ்வைக் கருமையான நிறத்துடன் ஒப்பிட்டு நவீன ஒப்பாரிக் கவிதைகள் எழுதியுள்ள உமா மஹேஸ்வரி; பறையின் சப்தமும் தோலும் இடம்மாறி விட்டதைப் பதிவு செய்து கவனம் பெற்ற சுகிர்தராணி... என்று பலரும் இன்று வெளியில் அறியப்படுகின்றனர்.

என்றாலும் கூட, சாகித்ய அகாதமியின் பார்வை ராஜம் கிருஷ்ணன், திலகவதி, அம்பை என வெகுசிலர் மீதே விழுந்திருக்கிறது. விருதுக்கு பெண்கள் தகுதியானவர்களாகத் தோன்றாதது ஏன்? நிலை இவ்வாறு இருக்க, பெண்களுக்கு அங்கீகாரம் வெகு விரைவில் கிட்டிவிடுகிறது என்று, எழுத வரும் பெண்களைப் பார்த்து பேசுவது ஏன்?

எஸ்.ராமகிருஷ்ணன் 'சொற்களின் தேவதைகள்' என்ற கட்டுரையில், 'அன்ன அக்மாதேவா, சில்வியா பிளாத், ஆன் சேக்ஸ்டன் மூவரும் நவீன கவிதையுலகின் மிகச் சிறந்த பெண் கவிகள். கவிஞர்களாக வாழ விரும்பி அதற்கு விலையாக தன்னையே தந்தவர்கள். கட்டுப்பாடான பார்வையை மீறிய பெண் வெளியை வெளிப்படுத்துகின்றன இவர்கள் கவிதைகள். பிரிட்டன், அமெரிக்கா, ருஷ்யா என்று வேறு வேறு தேசங்களில் இவர்கள் வாழ்ந்த போதும் ஒரு பெண்ணாகவும் கவிஞராகவும் வாழ்வதற்கு அவர்கள் சந்தித்த போராட்டங்கள் ஒன்று போலத்தான் இருக்கின்றன. குடும்பம் என்ற அமைப்பு இவர்கள் மீது தனது கூர் நகங்களை ஆழமாய் பாய்ச்சி உள்ளன' என்கிறார்.

இவர்கள் மணந்துகொண்டது கவிஞர்களைத் தான். ஆனால், மனநிலை பாதிக்கப்பட்டு, உடல் சீரழிக்கப்பட்டு தற்கொலைக்குத் தள்ளப்பட்டுள்ளனர். கணவனை விட பெயரும் புகழும் வர இருப்பு ஒரு பிரச்சினை ஆகிவிடுகிறது. குழந்தைகள் குடும்பம் பெரும் சுமையாகி நெருக்கடிக்கு ஆளாகி இறக்கிறார்கள்.

பெண் உடல் எப்போதும் ஆண் சார்ந்ததாகவே கருதப்படுகிறது. உடமை என்றும்கூட. எனவேதான் பிறர் சொத்து என்று கருதும் அனைத்தையும் அழிக்க அல்லது தனதாக்கிக்கொள்ள எண்ணும் நிலை ஏற்படும் போதெல்லாம் அசையா சொத்துக்கள் வசப்படுத்தப்படுகின்றன. பெண் அவமானப்படுத்தப்படுகிறாள். தனி மனித விரோதம், மதக் கலவரம், ஜாதி சண்டைகள், யுத்தம், உள் நாட்டு பிரச்சினைகள், பழிவாங்கல்கள் என அனைத்து இடங்களிலும் பெண் வன்புணர்ச்சிக்கு ஆளாக்கப்படுகிறாள். ஒரு பெண் தனியே அகப்பட்டுக் கொண்டால் ஒரு தனி மனிதனோ குழுவோ முதலில் கணக்கெடுப்பது அவளின் உடலையே. கலவரங்களில் பெண் உடல்கள் கூட்டம் கூட்டமாக சூறையாடப்படுகிறது. இது ஆணின் வெற்றியாகக்கூட கருதப்படுகிறது. அசையா சொத்துக்கள் அழிபடுவதுபோல பெண் உடலும் உயிர் என்ற மகத்துவம் அற்று கிழிக்கப்படுகிறது. இது மதம், ஜாதி என எல்லாவற்றிலும் இடம் பெறும் நிலை. பெண்கள் உட்சபட்சமாகவும் ஆரம்பக் கட்டமாகவும் உடலாகத்தான் பார்க்கப்படுகிறாள்.

பெண் உடல் எனும் போது அதன் மீது உரிமை உள்ளவர்கள் அதனை பாதுக்காக்க போடப்படும் தடைகளால் அவளின் உடல் அவளற்றுப் போகிறது. தாய், மனைவி, மகள் என எந்த நிலையிலும் இது தளர்த்தப்படுவது இல்லை.

பிறக்கும் போதே பெண் மீதான தடைகள் ஆரம்பமாகிவிடுகின்றன. அது முன்னமேயே தயாரிக்கப்பட்டு அமுல்படுத்திவரும் பட்டியல். ஆகையால் சுலபமாக பெற்றோரால் கையாளப்படுகிறது. இதைப் பற்றிய கவிதை ஒன்றில் வரும் பின்வரும் வரிகள்...

கணவனின் நோயாளித் தந்தைக்கு
சிறந்த செவிலி
கண்ணான செல்வங்களுக்கு
உன்னதத் தாய்
உடல் சார்ந்த பணிகளுக்கு
ஆதர்ச மனைவி
...



மாலதி மைத்ரி



சுகிர்தா ராணி



அனார்



லீனா மணிமேகலை

கால் சராய் போட்டு மரமேறி
ஊர் முழுவதையும் உன் பார்வையால் நீ அளக்க
பாவாடை தடுக்கி விழுந்து
ஆயுசுக்கும் மரமேற மறந்தேனே

...

இதையெல்லாம் கடந்து பெண் எழுத வந்தபோது, அதன் மீதான விமர்சனங்கள், அவளின் பாடுபொருள் பற்றியும் அவளுடைய கவிதைகளில் கவித்துவம் உள்ளதா இல்லையா என்பனவற்றை எல்லாம் தாண்டி, அவள் உடல் மீதான தாக்குதல்களாக மாறின. 'பெண் எழுத்துக்களில் ஆபாசம்' என்ற தலைப்பிட்டு, 'திருப்தியுறாத பெண்களே பாலியல் கவிதைகள் எழுதுகிறார்கள்' என்று ஆரம்பித்து, வசைபாடும் மொழியிலும் வக்கிர மொழியிலும் விமர்சிக்கப்பட்டன.

தொலைக்காட்சிப்பேட்டிகளில் கவிஞர்களிடமும் எழுத்தாளர்களிடமும் கேட்கப்படும் தவிர்க்க இயலாத கேள்வியாக, "பெண்கள் பாலியல் பற்றி எழுதுகிறார்களே? பெண்கள் ஆபாசமாக எழுதத் தொடங்கிவிட்டார்களே? அது குறித்து உங்கள் எண்ணம் என்ன?' என்பது இடம்பெற்றது. பெண்களின் எழுத்துக்களை அவர்களின் சொந்த அனுபவமா என்றறியும் ஆவல் இன்னும் பலருக்கு! உச்சபட்சமாக,'முலை இல்லாத பெண்கள்தான் முலை பற்றி எழுதுவார்கள்' என்ற கண்டுபிடிப்பு வேறு!

குகை ஓவியங்களில் தொடங்கி கோயில் கோபுரங்களிலும் உள்ளும் வெளியுமாய் விரவிக்கிடக்கும் ஓவியங்கள் மற்றும் சிற்பங்களைப் பார்த்தாலே போதும், ஆண்களால் செய்யப்பட்ட பெண்ணுடல் அங்கங்கள், அவர்களின் மனஎழுச்சிக்கு ஏற்ப எப்படி வடிக்கப்பட்டிருக்கின்றன என்பதை அறியலாம்; விம்மிய முலைகளும் வாடிய இடையுமாய்! அனைத்துமே ஆண்கள் பார்வையில் பெண்கள்; அல்லது அவர்களின் மாயையில் பெண் பிம்பம்.

இவர்களின் மாய உலகில், இவர்களின் எதிர்பார்ப்பில், இவர்களின் இச்சையில் பெண்களை எப்படியும் படைப்பார்கள்; பெண் தனக்கான இச்சையை ஒருபோதும் வெளிப்படுத்த முடியாது. தன் அங்கம் பற்றி அவள் கூறக்கூடாது.

பெண்ணுக்கும் உடல், பசி, கோப தாபம், காமம் எல்லாம் உண்டு. ஆனாலும், அவற்றை எழுதுவதால் சமுதாயத்துக்கு என்ன பலன் என்று கேட்கிறார்கள். இத்தனை காலமாக எழுதப்பட்ட எல்லா எழுத்துக்களும் சமுதாயத்துக்கு எல்லாப் பயன்களையும் வாரி வழங்கிவிட்டிருந்தால் எழுத்துக்கான தேவையே இல்லாமல் போயிருக்குமே?

பெண் கவிஞர்களுக்கு பலவிதங்களிலும் இடையூறுகள் விளைவித்து, அதன்மூலம் அவர்களை மனச் சோர்வுக்குள்ளாக்க நினைத்தார்கள்.

சில ஆண்டுகளுக்கு முன்பு ஓர் ஆண் எழுதிய கவிதையில், 'என்கணவர் மிகவும் வறண்டு இருக்கிறார்; எனவே, எனக்கு தெருவில் செல்லும் வியாபாரியுடனாவது புணரத்தோன்றுகிறது' என்னும் பொருள்கொண்ட வரிகள் எல்லா விமர்சகர்களாலும் பாராட்டப்பட்டது. அவர் பெண்ணின் உணர்வை மிக இயல்பாக வெளிப்படுத்தியிருக்கிறார் என்றும்கூட எழுதினார்கள். ஆனால், தன் உடல் பற்றி பெண் பேசும்போது ஆண்களால் ஜீரணிக்க இயலாததாகியிருக்கிறது.

ஆனால், இந்தத் தொடர் தாக்குதல்கள் பெண்களை எந்தவிதத்திலும் எழுதுவதிலிருந்து வீழ்த்தவில்லை என்பது இன்று எழுதும் பெண்களால் உறுதியாகியிருக்கிறது. தாக்குதல்களை பொருட்படுத்தாமல் பெண்கள் தங்கள் இலக்கிய ஓட்டத்தில் தங்குதடையின்றி இயங்கிக்கொண்டுதான் உள்ளனர். இதுதான் பெண்களின் மிகப் பெரிய பலம்.

(முற்றும்)

கிருஷாங்கினி <nagarajan63@gmail.com>

# ஒரே ஒரு சிறுகதை

## பாவண்ணன்

புதுக்கோட்டை ஞானாலயா நூலகத்தைப் பற்றி அம்ஷன்குமார் ஓர் ஆவணப்படத்தை எடுத்து முடித்திருப்பதாகவும் அந்தப் படம் புதுக்கோட்டையில் ஒரு திரையரங்கத்தில் வெளியிட இருப்பதாகவும் 'தினமணி' இதழில் ஒரு செய்தியைப் படித்தேன். 'இந்த வாரம் கலாரசிகன்' என்னும் பகுதியில் 'தினமணி'யின் ஆசிரியரே அக்குறிப்பை எழுதியிருந்தார். ஒருநாள் விட்டல்ராவுடன் உரையாடும்போது அந்தச் செய்தியைப் பகிர்ந்துகொண்டேன். அம்ஷன்குமார் எடுத்திருக்கும் பிற ஆவணப்படங்களைப் பற்றியதாகவும் அந்த உரையாடல் தொடர்ந்தது.

ஆவணப்படச் செய்தியைத் தொடர்ந்து சாகித்திய அகாதெமி 2022இல் வெளியிட்ட ஒரு சிறுகதைத் தொகுதியைப் பற்றியும் அதே பகுதியில் 'தினமணி' ஆசிரியர் குறிப்பிட்டிருந்தார். தமிழ்ப் பண்பாட்டின் அடையாளங்களை முன்வைத்திருக்கும் 34 சிறுகதைகள் அத்தொகுதியில் அடங்கியிருக்கின்றன. புதுமைப்பித்தன் தொடங்கி வண்ணதாசன் வரைக்கும் என பல்வேறு தலைமுறையைச் சேர்ந்த எழுத்தாளர்கள் அப்பட்டியலில் இருந்தார்கள். எழுத்தாளரும் பேராசிரியருமான பாரதிபாலன் அந்தத் தொகுப்பை உருவாக்கியிருந்தார். அதைப் பற்றியும் பேச்சோடு பேச்சாக விட்டல்ராவிடம் தெரிவித்தேன்.

அதைத் தொடர்ந்து தமிழ்ச் சூழலில் வெவ்வேறு காலகட்டத்தில் வெளிவந்த பல விதமான தொகைநூல்களை முன்வைத்து சிறிது நேரம் பேச்சு வளர்ந்தது. தஞ்சைச் சிறுகதைகள், சென்னைச் சிறுகதைகள், நெல்லைச் சிறுகதைகள் என வட்டாரம் சார்ந்து வெளிவந்த தொகுதிகளைப் பற்றியதாகவும் பேச்சு நீண்டது. அப்போது ஏறத்தாழ முப்பது ஆண்டுகளுக்கு முன்பாக தான் தொகுத்த 'இந்த நூற்றாண்டுச் சிறுகதைகள்' தொகுதியைப் பற்றி பேசத் தொடங்கினார் விட்டல்ராவ்.



"தொகுப்பு முயற்சியில் ஈடுபடும் ஆர்வம் எப்படிப் பிறந்தது?" என்று நான் கேட்டேன்.

"நானும் கலைஞன் பதிப்பகம் மாசிலாமணியும் பழைய காலத்துச் சிறுகதைகள், புதிய சிறுகதைகள்னு அடிக்கடி பேசிட்டே இருப்போம். அவர் சில கதைகளைப் பத்திச் சொல்வாரு. நான் சில கதைகளைப் பத்திச் சொல்வேன். அந்தக் காலத்துல அது ஒரு பொழுதுபோக்கு" என்றார்.

"ம்."

"ஒருநாள் அதேமாதிரி பேசிட்டிருக்கும்போதே திடீர்னு எழுத்தாளர்களுடைய பேருங்களையெல்லாம் ஒரு தாள்ல ஒரு பட்டியலா எழுதுங்க, அதுக்கப்புறம் அவுங்க எழுதிய மிகச்சிறந்த சிறுகதையைத் தேடி எடுங்க. அப்படி ஒரு நூறு பேருடைய கதைகளைத் திரட்டியெடுக்க முடிஞ்சா இந்த நூற்றாண்டுச் சிறுகதைகள்னு நாமே ஒரு பெரிய தொகுப்பைப் போட்டுடலாம்னு மாசிலாமணி உற்சாகமா சொன்னாரு."

"நீங்க என்ன சொன்னீங்க?"

"அதைக் கேட்டதும் ஒருபக்கம் உற்சாகமாவும் ஆசையாவும் இருந்தாலும் இன்னொரு பக்கம் தயக்கமா இருந்தது. ஒரு நிமிஷம் யோசிச்சி இந்த வேலையெல்லாம் வேணாம் சார். நான் சொந்தமா எழுதற வேலைக்கு இந்தத் தொகுப்பு வேலை இடைஞ்சலா இருக்கும்னு சொன்னேன். ஆனா அவர் விடவே இல்லை. ஒன்னொன்னுக்கும் நேரம் ஒதுக்கி வேலை செய்யற ஆளு நீங்க. பத்தோடு பதினொன்னா இந்த வேலையும் இருக்கட்டும். தைரியமா ஆரம்பிங்கன்னு சொன்னார். ரெண்டு மூணு தரம் அதையே திருப்பித் திருப்பிச் சொன்னார். தொடர்ந்து மறுக்கறதுக்கு எனக்கு மனசு வரலை. கடைசியில சரின்னு அந்தப் பொறுப்பை எடுத்துகிட்டேன்" என்றார்.



ஜெயகாந்தன், பாரதிதாசனுடன் பிச. குப்புசாமி

"சிலவேலைகள் இப்படித்தான் நமக்கு தற்செயலாக அமையும் சார். ஆனா நீண்ட காலத்துக்கு அது நமக்குப் பெருமை சேர்க்கிற ஒன்னா இருக்கும். 'இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து / அதனை அவன்கண் விடல்'னு திருக்குறள்ல சொல்ற மாதிரி சில வேலைகளுக்கு சிலர்னு ஊழ் தீர்மானிச்சிருக்குது. அதனாலதான் அந்த வேலை உங்களைத் தேடி வந்திருக்குது."

"என்ன ஊழோ, போங்க. ஏறத்தாழ ஒரு வருஷ காலம் என்னுடைய நேரம் இந்தத் தொகுப்புக்கே செலவாச்சி. எல்லாச் சிறுகதை ஆசிரியர்களுடைய தொகுதிகளும் எங்கிட்ட இல்லை. சில எழுத்தாளர்கள் எழுதுனதுல ஒரு தொகுதி இருக்கும், இன்னொரு தொகுதி இருக்காது. சில புத்தகங்களை நூலகத்துலேர்ந்து எடுத்தார வேண்டியிருந்தது. சில சமயங்கள்ல நண்பர்கள்கிட்ட கடனா வாங்கிவர வேண்டியிருந்தது. ஒரு கதையைத் தேர்ந்தெடுக்க நாற்பது ஐம்பது கதைகளைப் படிச்சாகணும். மணியை எடுத்து மாலை கோர்க்கிற மாதிரி ஒவ்வொரு கதையா பார்த்துப் பார்த்து எடுத்து இந்தத் தொகுதியை உருவாக்கினேன். இதெல்லாம் முதல் கட்டத்து சிரமங்கள். ஆனாலும் நம்மால தாங்கிக்கொள்ள முடியற எல்லைக்குள்ள இருப்பவை. ஆனால், அடுத்த கட்டத்து சிரமங்கள்தான் ரொம்ப மன உளைச்சலைக் கொடுத்திடுச்சி."

"அது என்ன ரெண்டாவது கட்டம்?"

"எழுத்தாளர் பட்டியல் தயாரானதும் சம்பந்தப்பட்ட எழுத்தாளர்களுக்கு தகவல் தெரிவிச்சி, தொகுதிக்குள்ள சேர்க்கிறதுக்கான அனுமதியை வாங்கணும். அதுதான் ரெண்டாவது கட்டம். நான் ஆரம்பத்துல நெனைச்ச அளவுக்கு அது சுலபமா அமையலை."

ஒருகணம் விட்டல்ராவின் பேச்சு நின்றது. ஏதோ ஒரு பழைய நினைவில் சிக்கிக்கொண்டதுபோல இருந்தது. சில நொடிகளுக்குப் பிறகு தானாகவே அவர் 'த்ச்' என்று நாக்கை சப்புக்கொட்டினார். சட்டென உரையாடல் நின்றுவிட்டது.

அவரை மீண்டும் பேசவைக்கும் வகையில் "ஏதாவது கசப்பான அனுபவமா சார்?" என்று அமைதியாகக் கேட்டேன்.

"கசப்புன்னு சொல்லமாட்டேன். சில சங்கடங்கள். அவ்வளவுதான். வேற ஒன்னுமில்லை."

"என்ன சங்கடம் சார்? யாராவது அனுமதி கொடுக்க முடியாதுன்னு சொன்னாங்களா?"

"ஒரே ஒருத்தர் அப்படி சொன்னார். மீறி அந்தக் கதையைச் சேர்த்தால் உங்கள் மீது வழக்கு தொடர வேண்டியதா இருக்கும். அதன்

பின்விளைவுகளை நீங்க சந்திக்கணும்னு எனக்கு மிரட்டற மாதிரி கடிதம் போட்டிருந்தாரு. அந்தக் கடிதத்தைப் படிச்சபோது சங்கடமா இருந்தது. சரி, அந்தப் படைப்பு அவுங்களுடையது, அப்படிப் பேசறதுக்கு அவுங்களுக்கு ஒரு உரிமை இருக்குதுன்னு நெனச்சி நானும் அதை விட்டுட்டேன். நானும் ஒரு எழுத்தாளர்ங்கற எண்ணமே இல்லாம தூக்கியெறிஞ்ச மாதிரி எழுதியிருந்தாரு. அதைப் படிச்சிட்டு ரொம்ப வருத்தப்பட்டேன். எதுக்குடா இந்த வேலையை இழுத்துப் போட்டுகிட்டோம்னு வெறுத்துபோயிடுச்சி. ஒரு எழுத்தாளரை இன்னொரு எழுத்தாளரே மதிக்கலைன்னா, வேற யாரு இந்த உலகத்துல மதிப்பாங்க?"

"யாரோ ஒருத்தர்தானே அப்படிச் சொன்னாரு. மத்தவங்க எல்லாரும் அனுமதி கொடுத்தாங்க, இல்லையா?"

"முக்கால்வாசிப் பேரு கடிதம் கிடைச்ச கையொடு அனுமதி கொடுத்து பதில் எழுதினாங்க. மீதிப் பேருங்க வேறுமாதிரி கடிதம் எழுதி சங்கடப்படுத்திட்டாங்க. அவுங்க அனுமதிக் கடிதங்களை வாங்கறதுக்குள்ள போதும்போதும்னு ஆயிடுச்சி."

'சங்கடமா? என்ன எழுதியிருந்தாங்க?"

"இந்தத் தொகுப்பு வேலை செய்யறதுக்கு நீ யார், அதுக்கு உனக்கு என்ன தகுதி இருக்குதுன்னு கேட்டு ரெண்டு மூணு எழுத்தாளர்கள் கடிதம் போட்டிருந்தாங்க. ஒருசிலர் என்னை ஃபோன்ல அழைச்சி நேரிடையாவே தொகுப்பு வேலை செய்யற அளவுக்கு நீ என்ன பெரிய சாதனையாளனான்னு கேள்விமேல கேள்வியா கேட்டு நோகடிச்சாங்க. நீ ஒரு சாதாரண வணிகப் பத்திரிகை எழுத்தாளன்தான, சீரியஸ் லிட்டரேச்சர் பத்தி உனக்கு என்ன தெரியும்னு கேட்டுட்டு நக்கலா சிரிச்சாரு ஒரு எழுத்தாளர். என் ஆர்வத்தைப் பத்தியும் என் திறமையைப் பத்தியும் இவுங்ககிட்ட நான் எப்படி நிரூபிக்க முடியும், சொல்லுங்க. இந்த மாதிரியான உரையாடல்களும் கடிதங்களும் அந்தக் காலத்துல எனக்கு ரொம்ப மன உளைச்சலா இருந்தது. இந்தத் தொகுப்பு வேலையே வேணாம், விட்டுடலாம்னு பல சமயம் யோசிச்சிருக்கேன்."

ஒருசில கணங்கள் விட்டல்ராவ் மௌனத்தில் ஆழ்ந்தார். எந்தக் குறுக்குக் கேள்வியும் கேட்காமல் அவராகவே மீண்டும் தொடரும் வரைக்கும் அமைதியாக அவருடைய முகத்தையே பார்த்தபடி உட்கார்ந்திருந்தேன்.

"இந்த சங்கடங்களையெல்லாம் தாண்டி வந்து எடுத்த வேலையை முடிக்கறதுக்கு காரணமா இருந்தவங்க ரெண்டு பேரு. ஒருத்தர் கலைஞன் பதிப்பகம் மாசிலாமணி சார். இன்னொருத்தர் என் மனைவி. எடுத்த வேலையை முடிக்கறதுலதான் நம் கவனம் இருக்கணுமே தவிர, இந்த மாதிரி கிண்டல்கள் மீது திரும்பிடக்கூடாதுன்னு ரெண்டு பேருமே அடிக்கடி சொல்லிட்டிருந்தாங்க."

தெரிந்தோ தெரியாமலோ, வலியளித்த பழைய தருணத்தைத் தொட்டு அசைத்துவிட்டோமோ என எனக்குள் வருத்தமெழுந்தது. இறந்த காலம் அவருடைய கண்முன்னால் மீண்டும் நிழலாடிச் செல்வதை என்னால் உணரமுடிந்தது.

ஏதாவது ஒரு புள்ளியில் உரையாடலின் தளத்தை மாற்றிவிட வேண்டும் என்று நினைத்தேன். விட்டல்ராவ் தன் நன்றிக்குரியவர்களாக இருவரைக் குறிப்பிட்ட தருணமே அதற்குப் பொருத்தமான தருணமெனத் தோன்றியது. உடனே, "உங்க வாசிப்பு அனுபவத்துல ஒரு எழுத்தாளருடைய கதைகள்ல ஏதோ ஒரு கதையை நீங்க தேர்ந்தெடுத்து அனுமதிக்கு எழுதியிருப்பீங்க. அந்தக் கதையையே எல்லாரும் ஏத்துகிட்டாங்களா? இல்லை இல்லை, இந்தக் கதை வேணாம், வேற கதை இருக்கட்டும்னு யாராவது சொன்னாங்களா?" என்று கேட்டு பேச்சின் திசையை மாற்றினேன்.

அக்கேள்வியைக் கேட்டதும் விட்டல்ராவின் முகம் மலர்ந்துவிட்டது. சோர்வூட்டும் மனநிலையிலிருந்து அவர் மீண்டுவிட்டார் என்பதை என்னால் உணரமுடிந்தது. உடனே உற்சாகம் ததும்ப பதில் சொல்லத் தொடங்கினார்.

"நான் குறிப்பிட்ட கதையை வேணாம்னு யாருமே சொல்லலை. உடனே அனுமதிக் கடிதம் எழுதி அனுப்பிட்டாங்க, ஒரே ஒருத்தர்தான் ஃபோன்ல கூப்பிட்டு, நீங்களா ஏன் கதையைத் தேர்ந்தெடுக்கிறீங்க? நான் சொல்ற கதையை சேர்த்துக்குங்க. கதையைத் தேர்ந்தெடுக்கிற உரிமையை எழுத்தாளன்கிட்ட கொடுங்கய்யான்னு சொன்னாரு."

"யார் சார் அந்த எழுத்தாளர்?"

"வேற யாரு கேப்பாங்க? நம்ம ஜெயகாந்தன்தான். நான் ஒரு கதையை எடுத்து வச்சிருந்தேன். ஒன்னையே ஏன் எல்லாரும் திருப்பித் திருப்பிச் சொல்லணும், அதைவிட சிறப்பான கதைய்யா இதுன்னு அவர் வேற ஒரு கதையுடைய தலைப்பைத் தெரிவிச்சார்."

"அந்தக் கதையைத்தான் தொகுப்புக்குள்ள சேர்த்தீங்களா?"

"அவரே ஆசைப்பட்டு சொல்லும்போது, அதை எப்படி வேணாம்னு சொல்லமுடியும். அதனால முதலில் சேர்த்திருந்த கதையை எடுத்துட்டு அவர் குறிப்பிட்ட கதையையே சேர்த்துவிட்டேன். அதைவிட வேறு ஒரு கோணத்துலயும் எனக்கு அவர் நல்லதொரு ஆலோசனையைக் கொடுத்தாரு."

"தொகுப்பு சார்ந்த ஆலோசனையா அல்லது



வேறு ஏதாவதா?”

“தொகுப்பு சார்ந்துதான். சிறுகதைகளின் பட்டியலைநான்ஒருதரம்பார்க்கலாமான்னுஒருமுறை மாசிலாமணிகிட்ட கேட்டாரு. அவரும் உடனே ஒரு ஆள்கிட்ட கொடுத்து அனுப்பி வச்சிட்டாரு. ரெண்டுநாள் கழிச்சி அவரே டெலிபோன்ல கூப்பிட்டு சிறப்பா இருக்குது மாசிலாமணி, நல்ல பட்டியல்னு பாராட்டி சொன்னாரு. தற்செயலா அவுங்க ரெண்டு பேரும் பேசிட்டிருந்த சமயத்துல நான் மாசிலாமணி அவர்களைச் சந்திக்கப் போயிருந்தேன். இதோ இதோ தொகுப்பாசிரியரே வந்துட்டாரு, அவுருகிட்டயே நேரிடையா சொல்லுங்கன்னு மாசிலாமணி சார் டெலிபோன என்கிட்ட கொடுத்துட்டாரு. ஜெயகாந்தன் பேசறாரு, பேசுங்க பேசுங்கன்னு சொன்னாரு.”

“என்ன சொன்னார் ஜெயகாந்தன்?”

“கதைப்பட்டியல் ரொம்ப நல்லா இருக்குது விட்டல், வாழ்த்துகள்னு சொன்னாரு. எல்லாரையும் தேடித்தேடி சேர்த்திருக்கறத பார்க்கும்போது சந்தோஷமாத்தான் இருக்குது. இன்னும் ரெண்டு எழுத்தாளர்கள் இருக்காங்க. ரொம்ப முக்கியமானவங்க. இந்த உலகம் அறிந்துகொள்ள வேண்டிய எழுத்தாளர்கள். எதுக்கும் ஆசைப்படாத ஞானிகள். தமிழ்நாட்டுல எழுத்தாளர் பட்டியல் போடற எல்லாருமே அவுங்க பேரை விட்டுடறாங்க. அவுங்க கதைகளைச் சேர்த்து நாமதான் அவுங்களை கௌரவப்படுத்தணும்னு சொன்னாரு.”

“யாரைப் பத்தி சொன்னாரு?”

“பேரைச் சொல்லுங்க சார், சேத்துக்கறேன்னு நானும் ஜெயகாந்தன்கிட்ட சொன்னேன். ஒரு எழுத்தாளர் பெயர் பி.ச. குப்புசாமி, திருப்பத்தூர்க்காரரு. ஆசிரியரா வேலை செய்பவர், அவர் ‘கங்கவரம்’னு ஒரு சிறுகதையை எழுதிருக்காரு. ரொம்ப நல்ல கதை. அந்தக் கதையைக் கேட்டு வாங்கி சேர்த்துக்குங்க. இன்னொரு எழுத்தாளர் பெயர் ‘திருமணம்’ பி. ஸ்ரீனிவாசன். ‘திருமணம்’ங்கறது ஊரு பேரு கிடையாது. அவரு எழுதுன சிறுகதையுடைய பெயர். ஒரு சிறுகதையுடைய தலைப்பே ஒருவருடைய பெயருக்கு முன்னால பட்டப்பெயரா இடம்பெறணும்ன்னா, அவர் எவ்வளவு நல்ல எழுத்தாளரா இருக்கணும்னு நெனச்சிப் பாருங்க. ஆனா அவரும் தன்னடக்கமான ஆளு. அவரு அடங்கியே இருந்ததால, உலகத்துக்குத் தெரியவேண்டிய அவருடைய பெயரை இங்க இருக்கிற எல்லாருமே மறந்துட்டாங்க. அந்தக் காலத்துல ‘கிராம ஊழியன்’ பத்திரிகையிலயும் மத்த பத்திரிகையிலும் நிறைய கதைகளை அவரு எழுதியிருக்காருன்னு சொன்னார்.”

“அதுக்கப்புறம் என்ன செஞ்சீங்க?”

“அவுங்க முகவரிகளைக் கொடுங்க சார், தொடர்புகொண்டு கதைகளை வாங்கிக்கறேன்னு சொன்னேன். உடனே ஜெயகாந்தன் ரெண்டு பேருடைய முகவரிகளையும் கொடுத்தார். கொடுக்கும்போது ஒரு வார்த்தை சொன்னாரு. அதை மறக்கவே முடியாது பாவண்ணன்.”

“என்ன சொன்னாரு?”

“நான் ஏதோ என்னுடைய பரிந்துரையால இந்த ரெண்டு பேரையும் மேல கொண்டு வர திட்டமிடறதா நினைச்சிடாதீங்க விட்டல். அடிப்படையிலேயே இவுங்க ரெண்டு பேரும் நல்ல எழுத்தாளர்கள். நல்ல நல்ல கதைகளை எழுதியிருக்காங்க. ஆனா ரெண்டு பேருமே ரொம்ப ரொம்ப தன்னடக்கமா இருக்கிற ஆளுங்க. குடத்திலிட்ட விளக்குன்னு சொல்வாங்களே, அந்த மாதிரியான ஆளுங்க. நாமதான் இவுங்க மேல வெளிச்சத்தைப் பாய்ச்சணும்னு சொல்லிட்டே போனாரு. ரெண்டு பேரையும் தொடர்புகொண்டு கதைகளை வாங்கறது என் பொறுப்பு சார்னு நான் ஜெயகாந்தன்கிட்ட சொன்னேன். கதை அனுப்புங்கன்னு பொதுவா கேட்டா எனோ தானோன்னு அனுப்பி வச்சிருவாங்க, அந்த ஆளுங்க. குப்புசாமிகிட்ட ‘கங்கவரம்’ கதையை அனுப்பவும்னு எழுதுங்க. ஜெயகாந்தன் சொன்னார்ன்னே எழுதுங்க. ஸ்ரீனிவாசன் இங்கதான் சென்னையிலயே பெசன்ட் நகர்ல இருக்காரு. நேருலயே பார்த்து பேசி ‘திருமணம்’ங்கற கதையைக் கொடுங்கன்னு கேட்டு வாங்குங்க. நான் சொன்னேன்னு சொல்லுங்கன்னு சொன்னாரு.”

“அவரு சொன்ன கதைகளையே அவுங்க அனுப்பினாங்களா?”

“வீட்டுக்குத் திரும்பியதுமே திருப்பத்தூர் குப்புசாமிக்கு எழுதினேன். ஒரு வாரத்துக்குள்ள ‘கங்கவரம்’ கதையை அவரு அனுப்பி வச்சிட்டாரு.

நல்ல கதை. ஒரு லீவ் நாள்ல ஸ்ரீனிவாசனுக்கு ஃபோன் பண்ணிட்டு பெசன்ட் நகர்ல அவருடைய வீட்டுக்குப் போய் பார்த்தேன். ஜெயகாந்தன் அனுப்பி வச்சாருன்னு சொன்னேன். அவருக்கு ரொம்ப சந்தோஷம். உக்காரவச்சி ரொம்ப நேரம் பேசிட்டே இருந்தாரு. என்னை விட வயசுல ரொம்ப பெரியவரு. ரொம்ப வருஷமா எழுதிட்டிருந்தவர்னு பேசப்பேச புரிஞ்சிகிட்டேன்."

"எந்தப் பத்திரிகையில எழுதினாரு? கேள்விப்படாத பேரா இருக்குது."

"அந்தக் காலத்துல திருச்சியிலேர்ந்து 'கிராம ஊழியன்'னு ஒரு பத்திரிகை வந்தது, கேள்விப்பட்டிருக்கீங்களா? திருலோக சீதாராம்ங்கற கவிஞர்தான் அதுக்கு ஆசிரியரா இருந்தாரு."

"கேள்விப்பட்டிருக்கேன் சார்."

"இலக்கியப் பத்திரிகைக்கு பொருத்தமே இல்லாம 'கிராம ஊழியன்'னு ஏன் பேர் வச்சாங்கன்னு எல்லாருக்குமே ஆச்சரியமா இருக்கும். அந்தக் காலத்துல திருச்சியில ஜஸ்டிஸ் பார்ட்டிகாரங்க 'நகரதூதன்'னு ஒரு வாரப் பத்திரிகை நடத்தினாங்க. அதுக்கு எதிரா துறையூருல ஒரு காங்கிரஸ்காரரு நடத்திய பத்திரிகைதான் 'கிராம ஊழியன்'. சில வருஷங்கள்தான் அவுங்களால நடத்த முடிஞ்சது. அப்புறம் நிறுத்திட்டாங்க. சில வருஷங்கள் கழிச்சி இலக்கிய ஆட்கள் கூடி புதுசா ஒரு பத்திரிகை நடத்த ஆசைப்பட்ட நேரத்துல அரசாங்கத்துடைய அனுமதி கிடைக்கலை. பத்திரிகைக்கு புது ரெஜிஸ்டரேஷன் இல்லைன்னு அரசாங்கத்துல சொல்லிட்டாங்க. அதனால ஏற்கனவே பதிஞ்சி வச்சிருந்த 'கிராம ஊழியன்' பத்திரிகையை வாங்கி அதே பேருல இலக்கியப் பத்திரிகையை நடத்தினாங்க. திருலோக சீதாராம் சில காலம் நடத்தியிருக்காரு. அதுக்குப் பிறகு வல்லிக்கண்ணன் ஆசிரியரா இருந்து சில காலம் நடத்தியிருக்காரு. அந்த நேரத்துல இந்த ஸ்ரீனிவாசன் அங்க வேலை செஞ்சிருக்காரு. பத்திரிகையிலயும் கதைகள் எழுதியிருக்காரு. பத்திரிகை நின்ன பிறகு 'தினமணி'யில வேலை செஞ்சிருக்காரு. நிறைய கதைகள் எழுதியிருக்காரு. ஜெயகாந்தன் குறிப்பிட்ட 'திருமணம்'ங்கற சிறுகதை அவருக்கு நல்ல பேரு வாங்கி கொடுத்திருக்குது. 'திருமணம்' ஸ்ரீனிவாசன்னு பட்டப்பேர் வச்சி கூப்பிடற அளவுக்கு அவருக்கு பேரு வாங்கி கொடுத்திருக்குது. ஜெயகாந்தன் அனுப்பி நான் வந்திருக்கேன்னு சொன்னதும் அவர் ரொம்ப சந்தோஷப்பட்டாரு. நூற்றாண்டுச் சிறுகதைகள்ங்கற தொகுதியில அவருடைய சிறுகதையைச் சேர்க்கப் போறேன்னு சொன்னதும் ரொம்ப சந்தோஷப்பட்டாரு அறைக்குள்ள போயி 'திருமணம்' கதையை தேடி எடுத்தாந்து கொடுத்தாரு."

"ஆகா. தேடிப் போன புதையல் காலடியிலேயே கிடைச்ச மாதிரி இருக்குது."

"சரியா சொல்லிட்டீங்க. அந்தக் கதையை கையில வாங்கற சமயத்துல உண்மையிலேயே ஏதோ ஒரு புதையலையே கையில வாங்கிக்கற மாதிரிதான் இருந்தது."

"எப்படி இருந்தது அந்தக் கதை?"

"எனக்கு ரொம்ப புடிச்சிருந்தது. நல்ல கதை. ஆறேழு பக்கம்தான் இருக்கும். அதனால அங்கயே உக்காந்து படிச்சிட்டேன். ஊருல ரெண்டு பெரிய தலைக்கட்டுங்க. நிலபுலன் எல்லாம் அவுங்க ரெண்டு பேருகிட்டதான் இருக்குது. ஊருல உழைக்கிற ஆளுங்க எல்லாரும் இந்த ரெண்டு பேருகிட்டதான் வேலை செஞ்சி பிழைக்கிறாங்க. ஏரித் தண்ணிய பாசனத்துக்கு திருப்பி விடற விஷயத்துல ரெண்டு அணிகளுக்கும் நடுவுல சண்டை வருது. அடிச்சிகிறாங்க. கல்யாணம் செஞ்சிக்க இருந்த ஒரு ஜோடி செத்துப்போவுது. அவுங்களுடைய குடும்பத்து ஆளுங்களும் செத்துடறாங்க. 'கஞ்சி குடிப்பதற்கிலார் அதன் காரணங்கள் இவையென்னும் அறிவுமிலார்'னு பாரதியார் பாட்டு ஒன்னு இருக்குதே, அதுக்கு சரியான எடுத்துக்காட்டு அந்த ஆளுங்க. பண்ணையாருக்காக சண்டையில எறங்கி தன் கூட்டத்து ஆளுங்கள தானே அடிச்சிச் சாகடிக்கிறாங்க. ஆனா பெரிய தலைக்கட்டுங்க ரெண்டும் ஓரமா நின்னு எல்லாத்தயும் வேடிக்கை பார்த்து ரசிக்கிறாங்க. மனசைத் தொடற கதை. இவ்வளவு காலம் அவரைப் படிக்கலையேன்னு ரொம்ப வருத்தமா இருந்தது. 'திருமணம்' கதையை நான் தொகுப்புக்கு பயன்படுத்திக்கறேன் சார்னு சொன்னேன். தாராளமா பயன்படுத்திக்குங்கன்னு அனுமதி கொடுத்தார். அதுக்கப்புறம் கொஞ்ச நேரம் பேசிட்டிருந்த பிறகு கௌம்பி வந்துட்டேன்."

"ஏதோ ஒரு வகையில உங்க தொகுப்பு 'திருமணம்' கதைக்கு ஒரு மறுபிரவேசத்தை கொடுத்திருக்குது."

"உண்மைதான் பாவண்ணன். இன்னைக்கு அவருடைய பேர் சொல்றதுக்கு இந்த ஒரு கதைதான் இருக்குது" என்று துயரம் தோய்ந்த குரலில் பெருமூச்சுடன் சொன்னார் விட்டல்ராவ்.

"ஏன் சார்? என்னாச்சி? ரொம்ப காலமா எழுதி வந்தவர்னு சொன்னீங்களே, அவருடைய தொகுப்புகள் எதுவும் வரலையா?"

"முப்பது முப்பத்தஞ்சி வருஷமா எழுதிவந்த ஆள். ஆனா ஒரு தொகுப்பைக்கூட கொண்டுவரலை. அவர் எந்த முயற்சியும் எடுக்கலையா அல்லது அப்படி ஒரு வாய்ப்பு அமையவே இல்லையான்னு தெரியலை. அந்தக் காலத்துல ஒரு தொகுப்பை கொண்டு வருவது அவ்வளவு சுலபமான காரியமில்லை. நான் 'திருமணம்' கதையைப் படிச்சி முடிச்சதும் தற்செயலா ஒருநாள் வல்லிக்கண்ணனைப் பார்த்து பேசறதுக்காக போயிருந்தேன். அப்ப அவரும் இந்த ஸ்ரீனிவாசனைப் பத்தி ரொம்ப உயர்வா சொன்னாரு.

அவரு சொன்னதுக்கப்புறம்தான் அவருடைய தொகுப்புன்னு சொல்லிக்க ஒரு புத்தகம் கூட வரலைன்னு தெரியும்."

"ரொம்ப துரதிருஷ்டம் சார்."

"என்ன செய்யறது பாவண்ணன். சில பேருடைய வாழ்க்கையில இப்படி சில சமயங்கள்ல அமைஞ் சிடுது."

நான் அந்த இரு எழுத்தாளர்களைப் பற்றியும் யோசித்துப் பார்த்தேன். என்னால் பி.ச. குப்புசாமியை தெளிவாக நினைவுகூர முடிந்தது. அவருடைய 'கங்கவரம்' என்னும் சிறுகதையை நான் ஏற்கனவே படித்திருக்கிறேன். 'வார்த்தை' என்றொரு சிற்றிதழ் வெளிவந்த காலத்தில் அவர் 'ஒரு பள்ளியாசிரியரின் நினைவுக் குறிப்புகள்' என்றொரு தொடரை எழுதியிருந்தார். அது ஒரு முக்கியமான தொடர். அதற்குப் பிறகு ஜெயகாந்தன் மறைந்த பிறகு, அவருடன் பழகிய நினைவுகளை ஒரு தொடராக இந்து தமிழ் நாளிதழில் எழுதிவந்தார். எழுத்தாளர் ஸ்ரீனிவாசன் பற்றி எனக்கு ஒரு தகவலும் தெரியவில்லை. விட்டல்ராவ் வழியாகவே அவரைப் பற்றி முதன்முதலாகத் தெரிந்துகொண்டேன்.




"பி.ச. குப்புசாமியை எனக்குத் தெரியும் சார். ஆனா ஸ்ரீனிவாசனைப் பத்தித்தான் ஒன்னுமே தெரியலை. தன்னடக்கம்ங்கற பேருல இன்னும் எத்தனை பேரு இப்படி உலகத்துடைய கண்ணுல படாமலேயே போனாங்களோ, தெரியலை."

"சில பேருடைய சுபாவம் அது பாவண்ணன். ரெண்டு மூணு கதை எழுதிய ஆளுங்க எல்லாம் தன்னைப் பத்தி தானே டமாரம் அடிச்சிக்குவாங்க. ஏராளமா எழுதிய ஆளுங்க என்னமோ எழுதினதோடு தன் கடமை முடிஞ் சிட்டுதுன்னு அமைதியா போயிடுவாங்க. இதெல்லாம் உலகத்துல இருக்கிற விசித்திரங்கள்ல ஒன்னு."

"சரி சார், ஸ்ரீனிவாசனை மறுபடியும் போய் பார்த்தீங்களா?"

"போய்ப் பார்த்தேன். ஏன் சார் நீங்க ஒரு தொகுதி கூட கொண்டு வர முயற்சி செய்யலைன்னு கேட்டேன். அவர் ஒரு பதிலும் சொல்லலை. அந்தப் பேச்சு எதுக்கு, விடுங்க. அதெல்லாம் பழைய கதைன்னு சிரிச்சிகிட்டே வேற விஷயத்தைப் பத்தி பேச ஆரம்பிச்சிட்டாரு."

"இப்படியும் ஒரு எழுத்தாளர் இருக்கமுடியுமான்னு ஆச்சரியமா இருக்குது சார்."

"எனக்கும் அப்படித்தான் இருந்தது. அவருக்காக ஏதாவது செய்யணுமேன்னு எனக்குள்ள ஒரு ஆசை ஓடிட்டே இருந்தது. உங்க கதைகளை சேத்து வச்சிருக்கீங்களா, இல்லை எழுதனதோடு மறந்துட்டீங்களான்னு கேட்டேன். பத்திரமா எடுத்து வச்சிருக்கேன்னு சொல்லிட்டு அறைக்குள்ள போய் கொஞ்ச நேரம் கழிச்சி ஒரு ஃபைலை கொண்டு வந்து கொடுத்தார். பிரிச்சிப் பார்த்தேன். ஒரு இருபது கதை இருக்கும். ஒவ்வொரு கதையையும் அழகா பின் பண்ணி வச்சிருந்தாரு. இந்த அளவுக்கு அச்சுப் பிரதிகளைப் பாதுகாத்து தயாரா வச்சிருக்கீங்களே, தொகுப்பு போட ஏன் சார் முயற்சி செய்யலைன்னு மறுபடியும் கேட்டேன். அவரு சிரிச்சிகிட்டே உதட்டைப் பிதுக்கினாரு. அந்தக் காலத்துல முயற்சி செஞ்சேன். ஆனா யாரும் போடறதுக்குத் தயாரா இல்லை. ஒரு கட்டத்துக்குப் பிறகு எனக்கும் சலிப்பு வந்திடுச்சி. விட்டுட்டேன்னு சொன்னாரு. அப்படி சொல்லும்போதும் அவரு சிரிச்சிகிட்டேதான் சொன்னாரு. அவரு குரல்ல வருத்தமோ கஷ்டமோ எதுவுமே இல்லை."

"அதிசயமான மனிதர் சார்."

"இந்த ஃபைலை என்கிட்ட கொடுங்க. நான் எடுத்தும் போய் எனக்குத்தெரிஞ்ச பதிப்பாளர்கள்கிட்ட காட்டி ஒரு தொகுப்பா கொண்டு வர முயற்சி செய்யறேன்னு சொன்னேன். தாராளமா எடுத்துட்டு போங்க, உங்களால முடிஞ்சா செய்ங்கன்னு பெரிய மனசோடு உடனே கொடுத்துட்டாரு."

"தொகுப்பா கொண்டுவர முடிஞ் சதா?"

"சொல்றேன் கேளுங்க. நான் ஏதோ ஒரு நல்ல நோக்கத்துலதான் அந்த வேலையை ஆரம்பிச்சேன். ஆனா என்னுடைய துரதிருஷ்டம். நான் நெனச்ச மாதிரி எதுவும் நடக்கலை" என்று நாக்கு சப்புக்கொட்டினார்.

"ஏன் சார்? என்னாச்சி?" என்று திகைப்புடன் கேட்டேன்.

"முதல்ல கலைஞன் பதிப்பகம் மாசிலாமணி சார்கிட்டயே கேட்டேன். இப்ப வேணாம் விட்டல். ஏகப்பட்ட புத்தகங்கள் பாக்கி இருக்குதுன்னு நேரிடையாவே சொல்லிட்டாரு. அதனால என் நண்பரா இருந்த இன்னொரு பதிப்பாளர்கிட்ட கேட்டேன். கொடுங்க, படிச்சிப் பார்த்துட்டு சொல்றேன்னு சொன்னாரு. ஃபைலை கொண்டு போய் அவருகிட்ட கொடுத்துட்டு வந்தேன்."

"என்ன சொன்னாரு அவரு?"

‘ரெண்டு வாரம் கழிச்சி அவருக்கு போன் பண்ணி கேட்டேன். இன்னும் படிக்கலைன்னு சொன்னாரு. அதுக்கப்புறம் ரெண்டு வாரம் கழிச்சி மறுபடியும் கேட்டேன். இன்னும் படிக்கலைன்னு அதே பதிலைத்தான் சொன்னாரு. நண்பராக இருந்ததால, திருப்பிக் கொடுத்துடுங்கன்னு கேக்கறதுக்கு எனக்கும் தயக்கமா இருந்தது. சரி, இன்னும் ரெண்டு மூனு வாரம் போவட்டும்னு விட்டுட்டேன்.”

“ஐயையோ, எல்லாப் பக்கங்கள்லயும் துரதிருஷ்டம்தானா?”

“என்னமோ போங்க. அவருடைய துரதிருஷ்டமோ என்னுடைய துரதிருஷ்டமோ. எனக்கு எதுவும் சொல்லத் தெரியலை.”

“கடைசியில என்னதான் நடந்தது? தொகுதி வந்ததா இல்லையா?”



“ஏற்கனவே திட்டமிட்டபடி கலைஞன் பதிப்பகம் நூற்றாண்டின் சிறுகதைகள் தொகுதிகளைக் கொண்டு வந்துட்டாங்க. ஜெயகாந்தன்கிட்ட தொகுதிகளைக் கொண்டு போய் காட்டினேன். அவருக்கு ரொம்ப சந்தோஷம். நல்லா வந்திருக்குது விட்டல்னு மீசையைத் தடவிகிட்டே சிரிச்சாரு. குப்புசாமி கதையும் ஸ்ரீனிவாசன் கதையும் இருக்கறத பார்த்து ரொம்ப சந்தோஷப்பட்டாரு. ஆனா தொகுதியைப் பார்த்து சந்தோஷப்பட வேண்டிய ஆள் அப்ப இல்லாம போயிட்டாரு.”

“என்ன சார் சொல்றீங்க? யாரு இல்லாம போயிட்டாங்க.”

“‘திருமணம்’ ஸ்ரீனிவாசன். ஏதோ உடல்நலக் குறைவு. திடீர்னு காலமாயிட்டாரு. தொகுப்புக்குள்ள தன்னுடைய கதை இருக்குதுங்கறத பார்க்காமலே போயிட்டாரு.”

“அவருடைய சொந்தக் கதைகளின் தொகுப்பு?”

விட்டல்ராவ் உதட்டைப் பிதுக்கியபடி தலையை அசைத்துவிட்டு ஒருகணம் நாக்கு சப்புக்கொட்டினார். “அதுவும் வரலை பாவண்ணன். என்னால அவருக்குக் கொடுத்த வாக்குறுதியை காப்பாத்த முடியலை. அந்தக் குற்ற உணர்விலிருந்து என்னால மீளவே முடியலை” என்றார்.

“என்னதான் சொன்னாங்க?”

“படிச்சிட்டு கொண்டுவரேன், படிச்சிட்டு கொண்டுவரேன்னு ஒரே பதிலையே ரொம்ப காலமா திருப்பித் திருப்பி சொல்லிட்டே இருந்தாரு அந்த நண்பர். பார்க்கற சமயங்கள்ல எல்லாம் அந்த ஒரே பதிலையே திருப்பித் திருப்பிச் சொன்னாரு. ஆனால், கடைசி வரைக்கும் கொண்டு வரவே இல்லை. எதிர்பாராத விதமா, அந்த நேரத்துல ஸ்ரீனிவாசன் சாரும் மறைஞ்சிட்டாரு. சரி, வேற எங்கயாவது முயற்சி செஞ்சி பார்க்கலாம்னு நெனச்சிகிட்டு திருப்பிக் கொடுத்துடுங்க சார்னு ஒருநாள் கேட்டேன். அங்க, வச்சிட்டேன், இங்க வச்சிட்டேன், தேடி எடுத்துக் கொடுக்கறேன்னு இன்னும் சில மாதங்கள் இழுத்தடிச்சாரு. பிறகு ஒருநாள் தொகுப்பு தொலைஞ்சி போயிடுச்சின்னு சொல்லிட்டாரு. எனக்கு என்ன செய்யறதுன்னே தெரியலை. ஒரு திகைப்போடு திரும்பி வந்துட்டேன். தீராத ஒரு குற்ற உணர்ச்சிக்கு என்னை ஆளாக்கிட்டார் அந்த நண்பர். ஸ்ரீனிவாசன் சாருக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேத்த முடியாம போயிடுச்சி.”

அவர் சொன்ன செய்தியைக் கேட்டு நானும் திகைப்பில் மூழ்கிவிட்டேன். எதிர்பாராத சூழல்களின் நெருக்கடியில் சிக்கி, இப்படி குற்ற உணர்வுக்கு ஆட்பட்டுத் தவித்த தருணங்கள் என் வாழ்விலும் நிகழ்ந்ததுண்டு. அதனால் ஒரு சொல்லும் எழாமல் அவரையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

“ஸ்ரீனிவாசன் ஒரு எழுத்தாளரா வாழ்ந்தார்னு இந்த உலகம் தெரிஞ்சிக்கறதுக்கு இப்ப இருக்கிற ஒரே சாட்சி, நூற்றாண்டின் சிறுகதைகள் தொகுப்புல இருக்கிற ’திருமணம்’ கதை மட்டும்தான். பத்து பன்னெண்டு குழந்தை பிறந்த வீட்டுல, எல்லாக் குழந்தைகளும் செத்து ஒரே ஒரு குழந்தை மட்டும் பிழைச்சி உயிர் வாழற மாதிரி இந்த ஒரே ஒரு கதை மட்டும் நிலைச்சிருக்குது.”

“இந்த தொகுப்பை நெனச்சி பெருமைப்படறதுக்கு பல காரணங்கள் இருக்குது சார். அதுல இதுவும் ஒரு காரணம்.”

எந்தப் பதிலும் சொல்லாமல் விட்டல்ராவ் தனக்குள் ஆழ்ந்தவராக ஒருசில கணங்கள் அமைதியாகவே இருந்தார். பிறகு ஒரு சோகமான புன்னகையுடன் “அதுல எனக்கு எந்தப் பெருமையும் இல்லை. ஜெயகாந்தனுக்குத்தான் அந்தப் பெருமை சேரணும். ஸ்ரீனிவாசனைப் பார்த்து கதையைக் கேட்டு வாங்குன்னு அவரு சொல்லலைன்னா, அந்தக் கதையை நான் சேர்க்கறதுக்கான வாய்ப்பே வந்திருக்காது” என்றார். ●

பாவண்ணன் <writerpaavannan2015@gmail.com>

# சந்தியா நடராஜன் கவிதைகள்





1

யோசனைக்கும்
கனவுக்கும்
இடையில்
எத்தனை மதன நடனம்?
எத்தனை மதன தகனம்?

2

மனநிழல்களின்
உரையாடல்
ஒத்திசைவாய்
உதடுகள்
மனதைக்
கெடுத்தது
மனசு

3

எய்ப்பினில் வைப்பென
எதுவுமில்லை
நிழலாடும்
கைத்த கனவுகள் தவிர
காமம்
நாம ரூபம்
கடந்தது

4

செவிகள் ஏங்கும்
ஒரு மாய குரலுக்கு

கண்கள் ஏங்கும்
மனம் மருகும்
ஓர் உருவுக்கு

மெய்யும் ஏங்கும்
ஒரு தீண்டல் சுகம் நாடி

ஐம்புலன் ஆட்சியில்
அகப்பட்ட அடிமையை
'ஏங்கித் தவிக்கிறான்' என்று
யார் சொன்னது?

அடிமைக்கேது
வாக்கு, வைராக்கியம்

5

ஒரு பெண்
பேச வருவதும்
பேசாமல் இருப்பதும்
வேறுவேறு வகைதொகைகள்
ஒரு பனிச்சறுக்கு விளையாட்டு
மாமலையும் கடுகாகும்.
கபாலமும் சுக்குநூறாகும்

6

கண்கள் உகுக்கும்
நன்றி
சலனப்படுத்தும்
சப்தமிடாது

7

கோபுர வாசல் கொடிமரம் என
நாற்புரம் எங்கும் அலமரும் கண்கள்
சலனக் கண்கள் சமதளக் கண்கள்
கனவுக் கண்கள் காதல் கண்கள்
ஆசைக் கனலில் அலமரும் கண்கள்
ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்"
பாடிச் சென்றவர் பக்கம் திரும்பி சடக்கென சொன்னேன்:
விழித்திரை கிழிந்தால்
விமோசனம் உண்டு

8

தொலைதூரத்திலிருந்து வந்தது
ஓர் அலைபேசிக் குரல்
தொலைந்துபோனது தொலைவு

9

சித்தம் சுமக்கும்
ஊமைப் படங்கள்
மறந்தவை பாதி
மிதப்பவை மீதி

தொடுகை மறந்தன
சுந்தர விரல்கள்
துருப் பிடித்தன
வாசற்கதவுகள்
வாவென அழைக்க
வார்த்தைகள் இல்லை
சிதை எரி சூழ
சொந்தங்கள் இல்லை
உறவுகள் எல்லாம்
பந்தம் அறுத்தன
காதலிகூட கையுறையோடு
ஈரடி தள்ளி
காலம் சொன்னது
தொற்றின் யுகமென
ஆரம்பமாயின
அந்தம் அறியா
அந்தர நாட்கள்

10

நிர்வாணம் அடைதல் என்பது
தீயை அணைப்பது போல
விளக்கை அணைப்பது போல
விளக்கமளித்தனர் புத்தபிட்சுகள்
முன்னாள் மூடன் நான்
என்னை அணைத்து
விண்ணைத் திறந்தவள் நீ
தீயை அணைப்பதுபோல

(தொடர்ச்சி 59ஆம் பக்கம்)


World class service for Design & Construction of Precast Buildings
We thank all our customers for their trust & confidence endowed upon us. Its our mission to continually strive to provide cost-effective & high quality PRECAST products
European Technology
Modern Construction
TEEMAGE
PRECAST
4 PRECAST FACTORIES
15 CRANES + 2 tower cranes
50 LAKHS SQ.FT CONSTRUCTED
Class 1A contractor of CPWD, SPL class contractor in R&B Andhra,
executed precast construction for CRPF, NBCC, NPCIL, DMRC, ISRO
150 PROJECTS COMPLETED
350 ENGINEERS
2000 EMPLOYEES
School in Coimbatore
25,300 Sq.ft
completed within 60 days
Commercial Mall
2,25,000 Sq.ft
completed in 120days
Hostel Building
26,000 Sq.ft
completed in 70 days
Housing for CRPF
72 Days 1 Block
251 Houses 11 Months
EASIER
FASTER
BETTER
SERVICES OFFERED
Design & Detailing
Planning
Production
Transportation
Erection
TYPES OF BUILDING
Commercial
Industrial
Institutional
Residential
Multi level-Car Parking
TEEMAGE
Corporate Office :
6/35, College Road, 1st Cross Street, Tiruppur - 641 602.Tamilnadu. India. Ph : 0421 2240488.
The Chennai Silks
4 Precast Factories Pan India
Coimbatore | Delhi | Hyderabad | Chennai
82204 55555, 82200 51777
email : sales@teemageprecast.in
marketingteemage@gmail.com
web : www.teemageprecast.in

(56ஆம் பக்கத் தொடர்ச்சி)

விளக்கை அணைப்பது போல
முழுநிர்வாணம்
முழுமையானது உன்னால்
ஆசை துறக்காமலே

## 11

விதிவழி அறியா
கதியிலா நமக்கு
நிச்சயமானது
நிரந்தரமானது
வினைவழி வாழ்க்கை

## 12

அளவுகோல் வைத்து இடப்பட்ட
நேர்கோட்டுக்கு உண்டா அழகு?
வளைவும் நெளிவுமே
வசியம் செய்பவை

## 13

பக்கவாத்தியம் இல்லாமல்
பாடப் பழகு
பற்றுக்கோடு இல்லாமல்
நிற்பது அழகு
கூட இருப்பவன் ஓடி வருவான்
என்பது மாயை
பல்லக்குத்தூக்கியின்
தோள்வலி அறியான்
பவனி வருவோன்
பத்திரிகை சகாக்களுக்குப்
பூப்போடுவான் பூலோக பிரமன்
பரம ரசிகனை பதரெனக்
காண்பான்
மகுடம் புனைந்ததும்
சமர் செய்யாமல் சமரசம் காண்பான்
அமர மருந்து அயலகப் பயணம் கைகூட
பற்றாளன் தரமறிந்து
உருட்டி மருட்டி உபதேசம் பண்ணுவான்
இன்னும் துலங்காத உனக்கு
இருக்கு ஓர் இருவரி சூத்திரம்
இலக்கியம் அரசியல் இரண்டல்ல
ஒன்றென்று உணர்

## 14

சில நேரங்களில்
நம் வாய் பேசுவதில்லை

சில நேரங்களில்
காதில் விழுந்தவை
செவிப்பறையில் அதிர்வதில்லை

கூனிக் குறுகியும் நிற்கிறோம்
மரத்துப் போய்விடுகின்றன
ஐம்புலன்கள்

பகுதி நேர மாற்றுத் திறனாளிகள் நாம்

## 15

எழுதப்பட்ட
எல்லாச் சிறுகதைகளையும்
தோற்கடிக்கிறது
ஒரு புகைப்படத்திற்குள்
ஒளிந்திருக்கும் ரகசியம்

## 16

ஆதிநாட்களின்
ஆசைமுகம் ஒன்று
ஆண்டுபல கடந்து
கடைத்தெருவில்
கடந்துபோவதைக் கண்டதும்
தற்செயலாய்ப்
பார்வையில் பட்டது
சாலையோரம் பட்டமரத்தில்
துளிர்க்கும் தளிரொன்று

## 17

பெயர் மாற்றி
பெயர் வைத்து
பெயர் அளவில்
மக்களாட்சி

## 18

'யாருடன் பேசினாய்'
சந்தேகத்தின் தர்க்கம்
'யாரும் பேசுவதில்லை'
மூப்பின் முனகல் மொழி ●

**சந்தியாநடராஜன்<sandhyapathippagam@gmail.com>**

# லாவண்யா கவிதைகள்

## 1. டோங்கர்கிரி வெங்கட்ரமணன் கோபுர வாயில்

மாலை நேர நடைப்பயணத்தில்
எதிரே உயர்ந்து நிற்கிறது
டோங்கர்கிரி வெங்கட்ரமணன்
ஆலய கோபுரம்
பின்னால் வெட்ட வெளியாக
விரிந்து கிடக்கும்
நீலவானம்

மனதிலுள்ள சின்னஞ்சிறுமி
மகிழ்ச்சியுடன்
தனது வலது கையின்
கட்டைவிரலையும் ஆள்காட்டி
விரலையும்
மானசீகமாய் இணைத்து,
'கிளிக்' என்று சொல்லி
விரிக்கிக்கிறாள்.

இப்போது
அந்த வெள்ளைக் கோபுரம்
அழியாத புகைப்படமாகிறது
ஆவல் ததும்ப அச் சிறுமி
தான் எடுத்த புகைப்படத்தை
அதே கட்டைவிரலாலும் ஆள்காட்டி விரலாலும்
விரித்து விரித்துப் பார்க்கிறாள்



கோபுரம் மண்ணிலிருந்து ஆகாயத்துக்கு
வாமன ரூபமாய்
வளர்ந்து நிற்கிறது.
பார்வைக்கு
மெலிந்து நின்ற கோபுரம்
தன் எல்லா ரகசியங்களையும்
பார் என்று
வலிந்து காட்டுகிறது சிறுமிக்கு.

## 2. உலகளந்த பெருமாள்

மண் ஒரு பாதம் விண்ணொரு பாதமாய்
உலகை அளந்தாயா
வாமனப் பெருமாளே
என்னே உன் அறியாமை
என்னையளக்க
விண்ணையும் மண்ணையும்
அளந்தால் போதுமா?

என் மண் எத்தனை நிறம்
ஒரே கால் போதுமா அத்தனை
வண்ணத்தையும் சூடிக்கொள்ள?
என் வானத்தில் எவ்வளவு மாயாஜாலம்
மீதமிருக்கும் இன்னொருகால்
என்ன செய்யும் பாவம்?

பரந்து விரிந்த வனங்களை
அதில் வாழும் பறவைகளை
நீர்நிலைகளை
மேடு பள்ளங்களை
எப்படி அளப்பாய் பெருமாளே?

பெரிதாய் ஒன்றும் வேண்டாம்
என் நிலத்தின்
ஒரே ஒரு மரத்தின் இலைகளை
எண்ணி முடிக்க ஆகுமா பெருமானே?

மேலும்
என்னுள் நிறைந்த காற்றை எப்படி அளப்பாய்?
அது கண்கட்டு வித்தையன்றோ
எதைக் கொண்டு அள்ளி எதில் நிரப்புவது?
என் மேனி மிதக்கும் கடலை
என்னுள் சுடரும் தீயைப் பற்றி
நீ நினைக்க வேண்டாம்
அதை நெருங்கக் கூட முடியாது!



ஏ! அனந்தகோடி திருவிக்ரமா!
என்னையளக்க கோடியுகம் பிறந்தாலும்
உன் பிரம்மாண்ட விஸ்வரூபம்
எண்ணிரு விரல்நுனிகளுக்குக்கு கட்டுப்பட்டதே.

## 3. கடவுளின் மறுபிறவி

வனத்தில் விருட்சமொன்றின்
முதிர்ந்த இலை
கிளை நீங்கியதால் அழத் தொடங்கியது.
நான் கடவுளிடம் வேண்டினேன்
அந்த பழுத்த இலை மீனாகி
காற்றில் நீந்தி இறங்கத் தொடங்கியது

அதைக் கண்ட பிற பசும் இலைகளும்
நாமும் மீன் ஆவோம்
நாமும் மீன் ஆவோம்
என்று மரம் நீங்கத் துடித்தன

அதிர்ந்த நான்
கடவுளைப் பார்த்தேன்
அவர் காற்றையே நீராக்கினார்
இலைகள் மகிழ்ந்து நீந்தத் தொடங்கின

அதன்பிறகு
கடவுளுக்கும் மூச்சு முட்டத் தொடங்கியது
“முட்டாள் கடவுளே
யார் எதைக் கேட்டாலும் கொடுப்பாயா?” இரைந்தேன்.

மறுபிறவி எடுத்த கடவுள்
நான் சொன்னதை மறவாமல்
நினைவு வைத்திருந்தார்
அவர் இப்போது யாருக்கும்
எந்த வரமும் தருவதில்லை. ●

**லாவண்யா**
<lavanya.sundararajan@gmail.com>

# சர்ப்ப யாகம்


## இந்திரா பார்த்தசாரதி
### ஓவியம்: மதுபானி


பூஜை அறையில் எப்பொழுதும் மங்கலான மஞ்சள் ஒளி இருந்து கொண்டேயிருக்கும். சுதா, காலையில் அவ்வறைக் கதவைத் திறந்தபோது, மஞ்சள் ஒளி வழக்கத்தை விட, சற்றுக் கூடுதலாக இருப்பது போல் அவளுக்குப் பட்டது.

சுவாமிப் படங்களுக்குப் பின்னால் ஜன்னல். வீட்டுக்கு வெளியேயிருந்த மரத்தின் இலைகள் காற்றில் உறைந்த நிலையில் இருப்பன போல் அசையாமல் நிற்பன போல் தெரிந்தன.. அறை உயிர் பெற்று எழுவது போல் அவளுக்குத் தோன்றிற்று.

சுரேஷ் இன்று பெல்ட் போட்டுக் கொள்ளவில்லையா? அலுவலகத்துக்குச் சீக்கிரம் போக வேண்டுமென்று நேற்றிரவு படுக்கப்போகும் முன் சொன்னான். புறப்பட்டுப் போய்விட்டானா? ஏழரை மணிக்குள்ளாகவா? சாத்தியமில்லை. பெல்ட் போடாமல் போகமாட்டானே? அவனுடைய பெல்ட், பாலாஜி படத்துக்கு எதிரே வட்டமாய்ச் சுருண்டு கிடந்தது.

சுரேஷ் கன கச்சிதமாய் தன் உடம்பை வைத்துக் கொண்டிருந்தான். நாள் தவறாமல் 'ஜிம்'முக்குப் போவான். ஒரு வேளை, இப்பொழுது 'ஜிம்'முக்குப் போயிருப்பானோ? இருக்காது. சுரேஷ் எங்கே?

அவள் அறையைவிட்டு வெளியே வந்தாள்.

சுரேஷ் வாசலிலிருந்து உள்ளே வந்தான். கையில் ஒரு 'ஃபைல்'.

"எங்கே போனே?" என்றாள் சுதா.

அவன் 'ஃபைலை'க் காண்பித்தான். "கார்லேந்து எடுத்துண்டு வந்தேன்" என்றான்.

"உன் பெல்ட் பெருமாள் படத்துக்கு முன்னாலே கீழே கிடக்கே?"

"என் பெல்ட்டா? என் பாண்ட்லியே இருக்கு அது. எப்படிக் கீழே கிடக்கும்?""

"சுவாமி உள்ளே போய் பாரு."

சுரேஷ் போனான்.

"எங்கே இருக்கு? என்ன சொல்றே நீ?"



என்றான் அவன்.

சுதா, சுவாமி அறைக்குள் வந்தாள்.

பெல்ட் அங்கு இல்லை!

"இங்கேதானே இருந்தது? எப்படிப் போச்சு?" என்றாள் சுதா.

அதற்குள் சுரேஷ் தன் 'பான்டை' எடுத்துக்கொண்டு வந்தான். அதைச் சுதாவிடம் காண்பித்தான்.

பெல்ட், பான்ட்டில் தொங்கியது.

பெல்டிலிருந்த துளைகள் அவளுக்குக் கண்களாகத் தெரிந்தன.

"இது பெல்டா?" என்று குரலைச் சற்று உயர்த்திக் கலவரத்துடன் கேட்டாள்.

"ஆர் யூ கிரேஸி?" என்றான் சுரேஷ்.

"நிச்சியமா சொல்றேன், அப்பொ நான் பார்த்த போது ஒண்ணு சுருண்டு கிடந்தது. உன் பெல்ட்ன்னு நினைச்சேன்."

"அது இப்பொ எங்கே?"

"தெரியலியே!"

"பாம்பா இருக்குமோ? பெல்டில் மறைந்தது பாம்பு, பாம்பில் மறைந்தது பெல்ட். இப்பொ பெல்டையும் காணோம், பாம்பையும் காணோம். ஸுன்யவாதம்" என்று புன்னகையுடன் கூறினான் சுரேஷ்.

"விளையாடாதே. பாம்புதான். அதோ அந்த மரத்திலேந்து ஜன்னல் வழியா உள்ளே வந்திருக்கு? ட்யூப் லைட்டைப் போடு."

"ஜன்னல் சாத்தியிருக்கே, எப்படி வரமுடியும்? சூட்சும சரீரமா?" என்று கேட்டுக்கொண்டே அவன் விளக்கைப் போட்டான்.

விளக்கு, சிறிது நேரத் தயக்கத்துக்குப் பிறகு ஒளிர்ந்து, பிறகு அணைந்துவிட்டது.

சுதா, கணவனைக் கலவரத்துடன்



பார்த்தாள்.

"ஏன் அப்படிப் பாக்கறே? 'ஃப்யூஸ்' ஆயிருக்கு, அவ்வளவுதான்" என்றான் சுரேஷ்.

"இப்பொவா ஆகணும்? எனக்கு என்னமோ பயமாயிருக்கு, பாம்புதான்" என்றாள் சுதா.

"சரி, அதான் இந்த விளக்கு இருக்கே? நான் சுவாமிப் படங்களுக்குப் பின்னாலே பாக்கறேன்" என்று கூறிக்கொண்டே போகத் தொடங்கினான் சுரேஷ்.

"ப்ளீஸ் போகாதே! இங்கே வா" என்று கத்தினாள் சுதா.

"வாட் ஈஸ் யுவர் ப்ராப்ளம்?" என்று கேட்டான் சுரேஷ்.

"அங்கே பாம்பு இருந்தா, உன்னாலே என்ன பண்ண முடியும்? வேண்டாம், விஷப் பரிட்சை."

"விஷப் பரிட்சை! கரெக்டா சொன்னே! விஷப் பரிட்சை, லிட்டரலி" என்று திரும்பி வந்து அவள் கைகளைக் குலுக்கினான் சுரேஷ்.

"ஆமாம், நீ எப்பொ குளிச்சே?" என்றான் தொடர்ந்து.

"நான் இன்னும் குளிக்கலே. சுவாமியை நமஸ்காரம் பண்ணலாம்னு கதவைத் திறந்தேன். 'அது' இருந்தது."

"எது? பாம்பா பழுதையா?"

"உனக்கு எல்லாம் விளையாட்டா இருக்கு. எனக்கு பயமா இருக்கு" என்றாள் சுதா.

"நான் அப்பொ கேட்டது 'metaphorical' கேள்வி, நீ எப்பொ குளிச்சேங்கிறது. பாம்பு ஒரு 'fertility symbol' புரியறதா?"

"நாப்பது நாளாறது. அப்பொ பாம்பு என் வயத்துக்குள்ளே இருக்குங்கிறியா?"

"ரியலி? என்கிட்டே நீ சொல்லவேயில்லியே? குட்! கிரேட் நியூஸ்" என்று சொல்லிகொண்டே அவளைக் கட்டிக் கொண்டான் சுரேஷ்.

"என்ன சொல்றே நீ? பாம்பு என் வயத்துக்குள்ளே இருக்கிறதா க்ரேட் நியூஸ்?"

"பாம்பு இல்லே, ஒரு குட்டி சுதா இருக்கா. பாம்பு ஒரு fertility symbol. உன் அடிமனசிலே..."

அவன் சொல்வதற்குள் சுதா குறுக்கிட்டாள், "ப்ளீஸ். உன் ஸ்டுப்பிட் சைகாலிஜியெல்லாம் வேணாம். பாம்புக்கே பொறுக்காமெ, அது இங்கே இருந்ததுன்னா, உன் 'போர்' தாங்காமே ஓடிப் போயிடும். சொர்ணம் வருவா இப்பொ. ரெண்டு மாசம் முன்னாலே அவ வீட்டுக்குள்ளே பாம்பு வந்துடுத்தாம். அவ புருஷன்தான் பிடிச்சு வெளியே வயக் காட்டிலே கொண்டு போய் விட்டானாம். பாம்பை அடிச்சுக் கொல்லக்கூடாது. அவகிட்டே சொல்லி அவ புருஷனை வரச் சொல்லலாம்" என்றாள் சுதா.

அப்பொழுது வாசல் மணி ஒலிக்கும் சப்தம் கேட்டது.

"இதோ அவளே வந்துட்டா... கதவைத் திற. நான் சுவாமி 'ரூம்' கதவைச் சாத்திண்டு வரேன்."

"எனக்கு 'ஆபீஸ்' சீக்கிரம் போயாகணும். பாம்பு, மந்திரவாதியெல்லாம். உன் பொறுப்பு. நான் வாசல் கதவைத் திறந்துட்டுக் குளிக்கப் போறேன்."

சுரேஷ் வாசல் கதவைத் திறந்தபோது, 'கரு கரு'வென்று வளர்ந்திருந்த ஒரு நீண்ட தாடி அவனை வரவேற்றது. திருநீறு பூசிய நெற்றி முழுவதையும் ஆக்ரமித்துக்கொண்ட வட்ட வடிவமான குங்குமப் பொட்டு. மலைக்குப் போகும் கோலத்தில் ஓர் இளைஞன் நின்று கொண்டிருந்தான்.

"சொர்ணம் குழந்தையைக் கூட்டிகிட்டு ஸ்கூலுக்குப் போயிருக்காங்க... டீச்சர் வரச் சொன்னாங்களாம். சொல்லச் சொன்னாங்க."

சுரேஷ் ஒன்றும் புரியாமல் தன்னைப் பார்ப்பதைக் கண்டு, அவன் புன்னகையுடன் சொன்னான்: "சொர்ணம் என்னைச் சொல்லிட்டு வரச் சொன்னாங்க... என் பேரு ராஜு."

சொர்ணத்தின் கணவன் என்று யூகித்துக்கொண்டான் சுரேஷ்.

"அப்படியா? உள்ளே வாங்க. உங்களுக்குப் பாம்பைப் பத்தித் தெரியுமா?" என்றான் சுரேஷ்.

"எதுக்குக் கேக்கறீங்க?" என்றான் ராஜு. தன் தாடியைப் பரிவுடன் நீவிக்கொண்டே.

"சொர்ணம் வரமாட்டாளா?" என்று கேட்டுக் கொண்டே, சுதா அப்பொழுது வந்தாள்.

"வருவாங்க... டீச்சர் வரச் சொன்னாங்களாம், பாப்பாகூட பள்ளிக்கூடம் போயிருக்காங்க."

“சுவாமி உள்ளே ஒரு பாம்பு வந்திருக்கு. வந்திருக்கான்னு நிச்சியமாத் தெரியலே. காத்தாலே பார்த்த மாதிரி இருந்தது. இப்பொ காணோம். எனக்கு ஒரே பயமா இருக்கு. நீங்க கொஞ்சம் வந்து பாத்தீங்கன்னா மனசு நிம்மதியா இருக்கும்.”

“அவருக்கு ‘டயம்’ இருக்கான்னு கேக்காமே நீ பாட்டுக்கு பேசிண்டே போறியே” என்றான் சுரேஷ்.

“பரவாயில்லீங்க... இன்னிக்குத் திருவாதிரை நட்சத்திரம், பஞ்சமி திதி. நாகம் வந்திருச்சுதுன்னா விசேஷங்க.”

“யாருக்கு விசேஷம்? நமக்கா நாகத்துக்கா?” என்றான் சுரேஷ்.

“சரி, நீ குளிக்கப் போ. ஆபிஸு’க்குச் சீக்கிரம் போகணும்னு சொன்னியே” என்றாள் சுதா.

“நாகம் எங்க உள்ளேங்க இருக்கு?” என்றான் ராஜூ.

“நாகம் இருக்கான்னு எனக்குத் தெரியலே. நீங்கதான் சொல்லணும். முதல்லே பெல்ட் மாதிரி தெரிஞ்சுது. அப்புறம் மறைஞ்சு போச்சு. என் பிரமையாகவுமிருக்கலாம்.”

ராஜுவை அழைத்துக்கொண்டு சுவாமி அறை அருகே சென்றாள் சுதா.

இது ஒரு சுவாரஸ்யமான அநுபவமாக இருக்கும் போல் சுரேஷுக்குப் பட்டது. ஆனால், அன்று அவனால் அலுவலகம் போகாமலிருக்க முடியாது. பத்து மணிக்கு ஒரு முக்கியமான ‘மீட்டிங்’. அவன் குளிப்பதற்காகச் சென்றான்.

குளியலறைக்குச் சென்று விளக்கைப் போட்டதும், அவனுக்கு ஏதோ ஒன்று நிழலாக ஓடி மறைவது போல் ஓருணர்வு தோன்றியது. இதென்ன பைத்தியக்காரத்தனம்? சுதாவைக்கிண்டல் செய்துவிட்டுத் தானே பயத்துக்கு அடிமையாவது வேடிக்கைதான்! பயம் ஒரு தொற்று நோய். சுதாவுக்கு அவனுடைய பெல்ட் ஏன் பாம்பாகத் தெரிந்தது? அவள் கனவில் பாம்பு வந்திருக்குமோ? உலகமெங்கும் பழங்காலத்திலிருந்தே பாம்பைப் பற்றி ஏராளமான கதைகள், நம்பிக்கைகள். பைபிளில், ஏவாளுக்குப் பாலுணர்வு தோன்றுவதற்குக் காரணமாக இருந்தது பாம்புதான்! நாகர்கோயிலருகே ஒரு கோவிலில் ஏராளமான பாம்புகள் ஒன்றோடொன்று பின்னிக்கிடந்த காட்சி அவன் மனக்கண் முன் வந்து நின்றது. அவன் திருமணம் ஆவதற்குமுன் அங்குப் போயிருக்கிறான்.

அந்தக் கோயிலுக்குச் சென்று பாம்புக்குப் பாலூற்றினால், புத்திர பாக்கியம் உண்டாகுமென்பது நம்பிக்கை! சுதா அங்குப் போக வேண்டுமென்று நச்சரித்துக்கொண்டிருந்தாள். போகவேண்டுமென்று எண்ணியதாலோ என்னவோ அவள் ‘குளித்து’ நாற்பது நாட்களாகிவிட்டன!

அவன் குளியலறையைவிட்டு வெளியே வந்தான். சுதா, சுவாமி அறைக்கு வெளியே நின்று கொண்டிருந்தாள்.

“ஏன் இங்கே நிக்கறே? ராஜு எங்கே?”

அவள் சுவாமி அறையை நோக்கிக் கையைக் காண்பித்தாள்.

“பாம்பு இருக்கா?”

“உள்ளே போனவுடனேயே, ‘இங்கே நாகம் வந்திருக்கு, இப்பொ இருக்கான்னு தெரியலே, பாக்கறேன், நீங்க வெளியே இருங்க’ன்னான். நான் வந்துட்டேன்” என்றாள் சுதா.

“வந்திருக்குன்னு எப்படித் தெரிஞ்சதாம்?”

“பாம்புலியே புழங்குகிறவாளுக்குப் பாம்பு வாசனை தெரியாதா?”

“பாம்புலியே புழங்கறானா? உனக்கு எப்படித் தெரியும்?”

“திருத்தணி பக்கத்திலே அவன் கிராமத்திலே பாம்புக்குன்னு ஒரு கோயில் இருக்காம். .பரம்பரைப் பரம்பரையா இவன் குடும்பந்தான் கோயில் பூசாரியாம். இவன் அப்பா சின்ன வயசிலேயே போயிட்டாராம். இவன் தாத்தா அங்கே இன்னும் பூசாரியா இருக்காராம்.”

“உனக்கு அவனைப் பத்தி இவ்வளவு தகவல்கள் எப்படித் தெரியும்?”

“அவன்தான் இப்பொ சொன்னான்.”

“பாம்பு ஒளிய உள்ளே எங்கே இடமிருக்கு? இன்னுமா தேடறான்?” என்றான் சுரேஷ்.

“தெரியலியே! இன்னொரு விஷயம் ‘பாம்பு பாம்பு’ன்னு சொல்லாதே. ‘நாகம்’னு சொல்லு. அப்படித்தான் சொல்லணும்னான் ராஜு.”

“சம்ஸ்கிருதத்திலே சொன்னாத்தான் மரியாதையா? இதோ பாரு, ஜன்னலோ மூடியிருக்கு. நம்மைத் தாண்டி பாம்பு... ஆம் ஸாரி பாம்பார், தமிழ்லியே மரியாதையா சொல்றேன், போயிருக்க முடியாது. அதனாலே...” என்று சொல்லிவிட்டு நிறுத்தினான் சுரேஷ்.

“அதனாலே?”

“உனக்கு நேத்து ராத்ரி பாம்பு சொப்பனம் வந்திருக்கலாம். உனக்கே ஞாபகம் இருக்கணும்னு அவசியமில்லே. என்ன சொப்பனம்னு துளிக் கூட நினைவுக்கு வராமெ போகறதுமுண்டு. அதனாலே உனக்கேற்பட்ட பிரமைதான் பாம்பு.”

சுதா அவனையே சிறிது நேரம் பார்த்துக்கொண்டு நின்றாள். பிறகு சொன்னாள்: “அப்பொ பாம்பு வந்திருக்குன்னு ராஜு ஏன் சொல்லணும்?”

“ஒரு வேளை உன் சொப்பனத்திலே வந்த

பாம்பையும் அவனாலே மோப்பம் பிடிக்க முடிஞ் சதோ என்னவோ?”

“அந்த வாசனை படுக்கை அறையிலேன்னா இருக்கணும், சுவாமி உள்ளே எப்படி வந்தது?”

“உன்கிட்டே இருக்கு அந்த வாசனை, ‘ரூம்’ எதிலியுமில்லே.”

அப்பொழுது சுவாமி அறைக் கதவு திறந்தது. ராஜூ வெளியே வந்தான். அவன் அவர்களுடன் எதுவும் பேசாமல் அவர்களைக் கடந்து சென்றான்.

“நாகம் இல்லியா?” என்றாள் சுதா.

அவன் பதில் சொல்லவில்லை. தாடியை நீவிக்கொண்டே ‘ஹாலி’ல் ‘டைனிங் டேபிள்’ நாற்காலி ஒன்றை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தான். அவன் சிந்தனையில் ஆழ்ந்திருப்பது போல் தோன்றிற்று.

“என்ன யோசிக்கறீங்க?” என்றான் சுரேஷ்.

“தட்சகன் தெரியுமா உங்களுக்கு?” என்று கேட்டான் ராஜூ.

“யார் அவர், எங்கே இருக்கார்? அவர் பாம்... நாகம் பிடிப்பாரா?” என்றாள் சுதா.

“என்ன அறியாமை!” என்று வேதனையின் வெளியீடாக அவன் முகத்தில் ஒரு புன்னகை தோன்றியது.

“பழத்தில் வந்து பரிட்சித்தைக் கொன்றவன் தட்சகன். மஹாபாரதம் படிச்சிருக்கீங்களா?”

“மஹாபாரதத்துக்கும் எங்க சுவாமி உள்ளே பாம்... நாகம் வரதுக்கும் என்ன சம்பந்தம்?” என்றாள் சுதா.

“உங்க முன்னோர்கள்ளே யாரோ ஒருவர் நாக ஹதம் செய்திருக்காரு. பரிகாரம் பண்ணனும்.”

“உங்க முன்னோர்னா, யாரு, என்னோட முன்னோரா இவளுடைய முன்னோரா?” என்று கேட்டான் சுரேஷ்.

“உங்க முன்னோர்தான். கல்யாணத்துக்கப்புறம் உங்க முன்னோர்தான் இவங்களுக்கும் முன்னோர்...” என்றான் ராஜூ.

“திருவாதிரை, பஞ்சமி, பாம்பு வரது விசேஷம்னு சொல்லிட்டு இப்பொ பரிகாரம் பண்ணனுங்கிறீங்க. இப்பொ அங்கே பாம்பு இருக்குங்கிறீங்களா?” என்றான் சுரேஷ்.

“இதோ பாருங்க. பரிகாரம் பண்ணறதும், பண்ணாமெ இருக்கிறதும் உங்க இஷ்டம். இப்பொ அங்கே நாகம் இல்லே. மறுபடியும் வராதுன்னு என்னாலே உறுதியா சொல்ல முடியாது. நல்ல நாளுங்கிறதினாலேதான் எச்சரிக்கை கொடுக்க வந்திருப்பாரு நாக ராஜான்னு எனக்குத் தோணுது. நம்பறதும் நம்பாமெயிருக்கிறதும் உங்க பிரியம்” என்று சொல்லிக்கொண்டே எழுந்தான் ராஜூ.

“உட்காருங்க ராஜூ. பரிகாரம்னா என்ன செய்யணும்?” என்றாள் சுதா.

“ஜெனமஜேயன் சர்ப்ப யாகம் பண்ணி நாகப் பரம்பரையே அழிக்கப்பாத்தாரு, முடிஞ்சுதா? அடக்க முடியலேன்னா, அடிபணியணும், அதுதான் வாழ்க்கைத் தத்துவம், இல்லீங்களா?” என்றான் ராஜூ சிரித்துக்கொண்டே.

“உங்களுக்கு எப்படித் தெரியும், என் முன்னோர் யாரோ ஒருவர் நாகஹதம் பண்ணார்னு?” என்று கேட்டான் சுரேஷ்.

“அது தொழில் ரகசியம். அதெ பத்தியெல்லாம் கேட்கக்கூடாது” என்றான் ராஜூ மர்மப் புன்னகையுடன்.

“நீங்க பரிகாரம் சொல்லுங்க. இன்னொண்ணு. நான் முழுகாமேயிருக்கேன், நாப்பது நாளறது. நான் பரிகாரம் பண்ணலாமா?”

“பாத்தீங்களா பாத்தீங்களா! அதெ நீங்க முதல்லே சொல்லியிருக்கணும்... நாகராஜா கடாட்சந்தான் இது. இப்பொத்தான் நீங்க பூஜை பண்ணி ஆகணும். அதுதான் பரிகாரம்..”

“என்ன பூஜை?”

“நாப்பத்தெட்டு நாள், ஸ்நாநம் செய்திட்டு, ஈரப் புடவையோட பாம்பு புத்தை ஒம்பது தடவை பிரதட்சணம் செய்திட்டு பாம்பு புத்துக்குப் பால் வார்க்கணும். புரிஞ்சதுங்களா?”

“நாப்பத்தெட்டு நாள் ஈரப் புடவையோடவா? நான் பாம்புப் புத்தை எங்குப் போய் தேடறது?” என்றாள் சுதா.

“’அப்படி முடியாட்டா, பாம்புக்குப் பதிலா கண்ணுக்குப் படற ஒரு பூனைக்குட்டிக்குப் பால் வார்க்கலாம், இல்லியா? நம்ம சாஸ்திரங்களெல்லாம் கெடுபிடி பண்ணாது. திருத்தங்கள் இல்லாமெ இருக்காது. சரிதானே ராஜூ?” என்றான் சுரேஷ், ஏளனத்தின் சாயைத் துளிக் கூட தெரியாத குரலில்.

ராஜூ, அவனைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்தான். முகத்தில் புன்னகை லேசாகத் தெரிந்தது.

“சரி. நான் உங்க பூஜை அறைக்குப் போய் ஒரு மணி நேரம் தியானம் பண்றேன். நீங்க எந்தக் காரணத்துக்காகவும் இந்த அறைக் கதவைத் திறந்து பாக்கக்கூடாது. ஒரு மணி நேரத்துக்குப் பிறகு திறக்கலாம். இதுதான் பரிகாரம். அப்புறம் எந்த நாகமும் உங்க வீட்டுக்கு வராது. பிறக்கிற குழந்தைக்கு ஆணாயிருந்தா நாகராஜன்னு பேர் வைங்க. பொண்ணா இருந்தா நாகம்மான்னு வைங்க. என்பேரும் நாகராஜன்தான், கூப்பிடறது ராஜூ..” என்றான் அவன்.

சுதா, சுரேஷைப் பார்த்தாள். இது பற்றி அவன்

முடிவு செய்ய வேண்டுமென்று அவள் விரும்புவது போல் அவனுக்குப் பட்டது.

“சரி செய்யுங்க” என்றான் சுரேஷ்.

“நீ ‘ஆஃபிஸ்’ போகலியா?” என்றாள் சுதா.

“நான் ‘மீட்டிங்’கை மத்தியானம் வச்சுக்கிறேன். ‘ஃபோன்’ பண்றேன் ‘ஆஃபிஸு’க்கு” என்றான் சுரேஷ்.

“எனக்கு ஒரு லிட்டர் பால் வேணும். பாலை ஒரு பாத்திரத்திலே ஊத்திக் கொடுங்க. சரியா, ஒரு மணி நேரம் கழிச்சுக் கதவைத் திறங்க” என்றான் ராஜு.

சுதா கேட்டாள், “ஃபிரிட்ஜ் பால் தேவலையா?”

“பரவாயில்லே. எந்தப் பாலா இருந்தா என்ன? பாத்திரத்திலே கொடுங்க.”

சுதா ஒரு பாத்திரத்தில் பாலைக் கொண்டுவந்து அவனிடம் கொடுத்தாள்.

அவன் பாலை வாங்கிக்கொண்டு பூஜை அறைக்குள் சென்றான்.

அவன் கதவைச் சாத்தினான். “நான் தாழ்ப்பாள் போட்டுக்கிலீங்க. உங்களை நம்பறேன், கதவைத் திறக்க மாட்டீங்கன்னு” என்றான் புன்முறுவலுடன்.

சுரேஷ் ‘ஆஃபீஸு’க்குப் போன் செய்தான். அவன் ’செக்ரட்ரி’ ரஞ்சனா எடுத்தாள்.

“மீடிங்’ ‘லஞ்சு’க்கு அப்புறம்னு எல்லார்கிட்டேயும் சொல்லிடு. இப்பொ எனக்கு வீட்டிலே கொஞ்சம் அவசரம் காரியமிருக்கு.”

“சரி, நான் குளிச்சிட்டு வந்துடறேன். ‘ஹால்’லெ இருங்க. சொர்ணம் வந்தாலும் வரலாம்.”

“சீக்கிரம் குளிச்சிட்டு வா.”

ராஜு ஒரு மணி நேரம் தியானம் செய்கிறேன் என்றுசொன்னதற்குத்தான் உடனே ஒப்புக்கொண்டது சுரேஷுக்குச் சற்று ஆச்சர்யமாகவிருந்தது. ஏதோ ஓருணர்வு அவனுக்குள்ளிருந்து அவனை ஒப்புக் கொள்ளத் தூண்டியதுபோல் அவனுக்குஇப்பொழுது பட்டது. என்ன காரணம்? சுதா அவனுடைய பெல்ட் போன்ற ஒன்றைப் பார்த்ததாகச் சொல்கிறாளே, அது பிரமைதானா? அவனுடைய குடும்பத்தில் யாரோ நாக ஹதம் செய்திருக்க வேண்டுமென்று கூறினானே, அம்மாவுக்கு எழுதிக் கேட்க வேண்டும். அம்மாவின் குடும்பத்தில் இருக்காது. அப்பா குடும்பத்தில்தான். அவனுடைய அப்பா கும்பகோணத்தில் அவர் தாத்தா வீட்டுக் கொல்லைப் புறத்தில் பாம்புகளின் நடமாட்டம் உண்டு என்று கூறியிருக்கிறார். அந்த வீடுகளிலெல்லாம் கழிப்பறை கொல்லைப் புறத்துக் கோடியிலிருக்கும். இரவு கழிப்பறைக்குப் போக வேண்டுமென்றால் அது பெரிய சாகசம்தான் என்று அவன் அப்பா சொல்லியிருக்கிறார். கொல்லைப் புறப் பாம்புகளில் ஏதேனுமொன்று அடித்துக் கொல்லப் பட்டிருக்கலாமோ?

அவனுக்குச் சிரிப்பு வந்தது. விஞ்ஞான உலகில் இப்படியெல்லாம் சிந்திப்பது என்ன பைத்தியக்காரத்தனம்!

சுதா குளித்துவிட்டு, “இன்னும் சொர்ணம் வரலியா?” என்று கேட்டுக்கொண்டே வந்தாள்.

வாசல் மணி ஒலித்தது.

சுதா திறந்தாள்.

ஓர் இளைஞன் நின்று கொண்டிருந்தான்.

“யாரு, என்ன வேணும்?” என்றாள் சுதா.

“நான் சொர்ணத்தோட ‘ஹஸ்பெண்ட்’. இன்னிக்கு அவ வேலைக்கு வரமாட்டா. சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேன்.”

சுதா திடுக்கிட்ட நிலையில் கணவனைப் பார்த்தாள். சுரேஷ் அதிர்ச்சியில் எழுந்து நின்றான். அப்படியானால், ராஜு யார்?

“நீங்க சொர்ணம் வர நேரமாகும்னு சொல்ல வேற யாரையானும் அனுப்பிச்சங்களா?” என்றான் சுரேஷ்.

“இல்லியே?” என்றான் சொர்ணத்தின் கணவன்.

“ராஜு தன்னைச் சொர்ணத்தின் கணவன் என்று சொல்லிக் கொள்ளவேயில்லையே? அவர்களாகவே தானே அப்படி நினைத்துக்கொண்டார்கள்!

“வேற யாரானும் வந்து சொன்னாங்களா?” என்றான் சொர்ணத்தின் கணவன்.

“உங்க பேர் என்ன?” என்று கேட்டான் சுரேஷ்.

“நாகராஜன், ராஜுன்னு கூப்பிடுவாங்க.”

சுரேஷும் சுதாவும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். சுரேஷ் மணியைப் பார்த்தான். இன்னும் கால் மணி இருந்தது. பரவாயில்லை. யார் இந்தப் போலி ஆள்? சும்மா விடக் கூடாது அவனை.

சுரேஷ் பூஜை அறையைத் திறந்தான். அறை காலியாக இருந்தது! பால் பாத்திரம் கழுவி விடப்பட்டது போல் ‘பள பள’ என்றிருந்தது. பால் இல்லை! ஜன்னல் கதவு திறந்திருந்தது! வெளியே மரத்தில் சலனம்! இலைகள் அசைந்தன. ‘ட்யூப் லைட்’ எரியத் தொடங்கியிருந்ததால் அறை பிரகாசமாயிருந்தது! ●

இந்திரா பார்த்தசாரதி
<parthasarathyindira@gmail.com>

published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.
Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.
Editor : PRABHU THILAAK

Posted at patrika channel egmore (Posted between 28-31st of January 2024)
Date of Publications : 25th of every month Reg.No.TN/TBM/150/2024-2026. ISSN Number 2456-3447 Dated: 04/10/2016.
R.DisNo. 2010/2002 RNI. TNTAM/2006/17955 Licenced to Post without Prepayment No: TN/PMG(CCR)/WPP 722/2024-2026.